இஸ்லாத்தின் வழியில்

# பெண்கள் சுத்தம்


ஷெய்க் முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உஸைமீன்

ஆங்கில மொழிபெயர்ப்பு
கலாநிதி ஸாலிஹ் அஸ் ஸாலிஹ்

தமிழில்
எஸ். எம். மன்சூர்


TAMIL - 261


Co-operative office for Call & foreigners Guidance at Sultanah

**The Co-operative office for Call & foreigners Guidance at Sultanah**
Under the supervision of Ministry of Islamic Affairs and
Endowment and Call and Guidance


Tel. 4240077 Fax 4251005 P.O. Box 92675 Riyadh 11663 E-mail: Sultanah22@hotmail.com









## இஸ்லாத்தின் வழியில்

# பெண்கள் சுத்தம்


**செய்க் முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உதைமீன்**

*ஆங்கில மொழிபெயர்ப்பு*

**கலாநிதி ஸாலிஹ் அஸ் ஸாலிஹ்**

*தமிழில்*

**எஸ். எம். மன்சூர்**



*வெளியீடு :*

அழைப்பு, வழிகாட்டல்களுக்கான கூட்டுறவுச் செயலகம்

அல் பதிய்யாஹ் – சனசமூகப் பிரிவு

ரியாத் – சவூதி அரேபியா.

# பொருளடக்கம்

# முன்னுரை

மனிதருள் ஒரு பாதி ஆண்களென்றால் மறு பாதி பெண்களாவர். இந்த வகையில் ஆண்களுக்குள்ள எல்லா உரிமைகளும் கடமைகளும் பெண்களுக்கும் இருக்கின்றன. இவற்றை இவர்களது இயல்புக்கும் உணர்வுகளுக்கும் உடற் கூறு அமைந்துள்ள முறைக்கும் ஏற்ப, பெற்று வாழ்ந்தால் இரு சாராரிடம் எத்தகைய இணக்கமின்மையும் தோன்றாது; பிரச்சினைகளும் இருக்காது. வாழ்க்கைப் படகு மிக இன்பமாக ஓடும், இன்ஷாஅல்லாஹ்.

ஆனால், ஆண் பெண் தொடர்பாக சிற்சில மதங்கள் மட்டுமல்ல, நவீன கோட்பாடுகள் கூட நடந்து கொள்ளும் விதம் வியப்புக்குரியதாய் உள்ளது. ஒரு மதம், ஒரு புறம் - பெண்ணைத் தெய்வத்தின் நிலைக்குக் கொண்டு சென்றதுடன், மறு புறம் - அவர்களை தேவ தாசிகளாக்கி அழகு பார்த்தது. மற்றொரு மதம் 'பெண்களுக்கு ஆன்மா உண்டா'? என்ற அதிசய ஆராய்ச்சியில் ஈடுபட்டது. மற்றொன்று பெண்களை 'பேய்கள்' என வர்ணித்தது.

இந்த அவல நிலையிலிருந்து அவளைப் பாதுகாத்து, உரிமை வழங்கி, உயர்த்தி விட வந்த நவீன கோட்பாடுகள் தொழிற் துறையிலும் சமூக விடயங்களிலும் அவர்களுக்கு ஒரு வகையான இடத்தை வழங்கியது என்னவோ உண்மைதான். ஆனால், அக்கோட்பாடுகள் பெண்களுக்கு, 'ஆண்களிலும் மாறுபட்ட உடற்கூறு உண்டு' என்றோ, 'பெண்மை' என்றொன்று உண்டு என்றோ காணத் தவறிவிட்டன. அதனால், கால நேர வேறுபாடின்றி, கடின வேலைகளில் அவர்கள் ஈடுபடுத்தப் பட்டனர்; ஆண்களிடம் போலவே அவர்களிடமும் உடலுழைப்பு பெறப் பட்டது. இத்தகைய ஒரு துன்பம் அவர்களை ஒரு புறத்தில் வதைத்த பொழுது, மறுபுறம் பல வழிகளிலும் அவர்கள் வெட்கம் கூச்சமின்றி சர்வசாதாரணமாக ஆண்களுடன் பழகும் நிலைக்குத் தள்ளப்பட்டதால் ஒழுக்கக் கேடு எங்கும் தலைவிரித்தாடத் தொடங்கி விட்டது.

அடுத்து, ஒழுக்க, ஆன்மிக, தார்மிக மாண்புகளை மதித்து, அவற்றின் அடிப்படையில் மனித சமுதாயத்தைக் கட்டியெழுப்புவதை விட்டுவிட்டு வெறும் பொருளாதார கண்ணோட்டத்தில் கட்டியெழுப்ப விழைந்ததால் வாழ்வின் சகல துறைகளும் சீர்கெட்டு விட்டது. குறிப்பாக, குடும்ப வாழ்வு சீர்குலைந்து போனது.

குடும்பத்தில் கணவன் உழைத்து வர, மனைவி அதை சிக்கனமாக் செலவு செய்து, பிள்ளைகளை ஒழுக்கம், கல்வி, கட்டுப்பாடு போன்ற பண்புகளில் சிறந்து விளங்க வழிசெய்தல்தான் வள வாழ்விற்கு வழி வகுக்க முடியும். ஆனால், கணவன் மனைவி இருவருமே உழைப்புக்கு வெளியே சென்று மாலையில் வீடு வரும்போது இருவருமே களைப்புற்றிருப்பர். அப்பொழுது யார் யாருடைய தேவையைக் கனிவுடன் கவனிப்பது என்ற சிக்கல் வந்துவிடும். அதனால் இருவரும் உள உடல் ரீதியாக பாதிக்கப்படுவர்; நிம்மதி குறைந்து விடும்; மனக் கசப்புகள்கூட வந்து விடலாம். அதோடு, பிள்ளைகளை ஒழுங்காகப் பராமரிக்கக் கிடைக்காததால்

அவர்கள் வாழ்வும் குட்டிச் சுவர் ஆகிவிடும். விதிவிலக்காக சில குடும்பங்கள் இந்நிலைக்கு மாறாக இருக்கலாம். ஆனால், பொதுவான நிலை இதுதான் என்பதை மறுக்க இயலாது.

இவற்றையெல்லாம் கவனத்தில் கொள்ளாத சிலர் இவ்வழிகளிலேயே தமது பெண்ணுரிமைப் போராட்டத்தை நடத்துவது வேதனைத்தரும் விஷயம். சிலவேளை, பெண்கள் படும் பாடு அவர்களை அவ்வாறு செயற்படத் தூண்டி இருக்கலாம். அதனால், எத்தகைய பயனும் இல்லை – இன்னுமின்னும் ஒழுக்கக்கேடு வளர்வதைத் தவிர என்பதை அவர்கள் காலத்தால் உணர்வர் என்பதில் ஐயமில்லை.

இஸ்லாம் பெண்களின் இயல்பை மதித்து, என்றென்றும் சிறப்பாக வாழ்வதற்கான வழியைக் காட்டி நிற்கின்றது. அது இந்து மதத்தில் போல பெண்களை தெய்வத்தன்மை கொடுத்து உயர்த்தி விடவில்லை; 'தேவதாசி' என இழித்துரைத்து தாழ்த்தி விடவுமில்லை. மாறாக, அவர்களை மனிதப் பிறவிகளாகக் கருதி காரியமாற்றி வருகின்றது.

அல்லாஹ் அருள்மறையில் குறிப்பிடுகின்றான்:

*"அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும், நீங்கள் அவர்களுக்கு ஆடையாகவும் இருக்கின்றீர்கள்."*

(அல் குர்ஆன் 2:187)

*"கணவர்களுக்குப் பெண்களிடம் இருக்கும் உரிமைகள் போன்று, முறைப்படி அவர்கள்மீது பெண்களுக்கும் உரிமையுண்டு."*

(அல் குர்ஆன் 2:228)

இவ்வாறு மொழிந்த அல் குர்ஆன் வழிவந்த இஸ்லாம், ஆணும் பெண்ணும் அவரவர் இயற்கைக்கு ஏற்ற விதத்தில் தத்தமது உரிமைகளைப் பெற்று கடமைகளை நிறைவேற்ற அழகிய வழியைக் காட்டியுள்ளது; அமுல் படுத்தியும் உள்ளது.

ஒருபுறம் ஆணும் பெண்ணும் தத்தமது உரிமைகளைப் பெற்று சிறப்பாக வாழ வழி செய்த இஸ்லாம், மறுபுறம் பெண்களின் உடல் சார்ந்த தனியான விடயங்களையிட்டும் மிகவும் தெளிவான வழி காட்டல்களை வழங்கத் தவறவில்லை. அந்த வகையிலும் இஸ்லாம் தனித்து மிளிர்கின்றது.

அத்தகைய யாவற்றையும் ஒன்று திரட்டி நூல் வடிவமாகத் தரும் வகையில் அமைந்ததே இந்த 'இஸ்லாத்தின் வழியில் பெண்கள் சுத்தம்' எனும் நூல். இதனை சங்கைமிக்க செய்க் முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உதைமீன் அவர்கள் 'அத்திமாஉ அத்தபிஇய்யது லின்னிஸாஃ' என்ற பெயரில் எழுதி நம் கரங்களுக்கு வழங்கியுள்ளார். இதன் ஆங்கில மொழி பெயர்ப்பிலிருந்து தமிழில் தருபவர் இலங்கையைச் சேர்ந்த சகோதரர் எஸ்.எம். மன்சூர் அவர்கள். இவர்கள் நம் பாராட்டுக்குரியவர்கள்.

இந்நூலை ஒவ்வொரு பெண்ணும் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற எண்ணத்திலேயே இதனைத் தமிழிலும் மொழி பெயர்த்து வெளியிட ஆர்வம் கொண்டோம். எமது இந்த ஆர்வத்தை மதித்து, இதனைப் படித்து, தமது வாழ்வில் திருத்தங்களைக் காண விழையும் அனைத்துப் பெண்களுக்கும் அல்லாஹ் ஈருலக பாக்கியங்களை நல்குவானாக. அவன் கருணை மிகுந்தவன்; தன்னை நாடி வருபவர்க்குத் தாராளமாக அள்ளி

வழங்குபவன்.

அவனது தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும், அவர்களது உற்றார், உறவினர், தோழர்கள், அவர்கள் வழி நடப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் சாந்தியும் சலாமும் உண்டாவதாக.

புகழ் எல்லாம் அல்லாஹ் ஒருவனுக்கே. அவனது அனுக்கிரகம் இல்லாது எவரும், என்றும், எங்கும் ஈடேற்றம் காண முடியாது.

**வெளியீட்டாளர்கள்**

ரியாத், சவூதி அரேபியா
01 – 01 – 1995

# ஆங்கில மொழிபெயர்ப்பாளர் முன்னுரை

بسم الله الرحمن الرحيم

إنّ الحمْدَ للهِ تعالى نَحْمَدُهُ ، ونستعينُ بهِ ونَستَغفِرُهُ ، ونعوذُ باللهِ تعالى من شرورِ أنفسِنا وسيِّئاتِ أعمالِنا من يهْدِهِ الله تعالى فلا مُضِلَّ له ، ومن يُضْلِلْ فلا هاديَ له.وأشهدُ أن لا إلهَ إلاّ الله وحدَهُ لا شريكَ له. وأشهَدُ أنَّ محمّداً عبدُهُ ورَسولُهُ، صلى الله عليهِ وآلِهِ وسَلَّمَ.

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் ஆரம்பிக்கின்றேன்.

அல்லாஹ் ஒருவனுக்கே அனைத்துப் புகழும் உரித்து. நாம் அவனைப் புகழ்ந்து, அவன் உதவியையும் பாவ மன்னிப்பையும் வேண்டி நிற்கின்றோம். மிகவும் கண்ணியம் பொருந்திய அல்லாஹ்விடம் நாம் பாவங்கள், கெட்ட செயல்கள் ஆகியவற்றில் வீழ்ந்து விடுவது தொடர்பான பாதுகாப்பை நாடி நிற்கின்றோம். அல்லாஹ்வின் வழிகாட்டல் எவருக்குக் கிடைக்கின்றதோ அவரை எவரும் வழி கெடுத்து விட முடியாது; அத்துடன், எவருக்கு அல்லாஹ்வின் வழிகாட்டல் கிடைக்கவில்லையோ அவரை எவரும் நல்வழி படுத்திடவும் முடியாது. மேலும், அல்லாஹ் ஒருவனே வணக்கத்திற்கும் வழிபாட்டிற்கும் உரியவன் என நான் சான்று பகர்கிறேன்; மேலும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனின் அடிமையும் திருத் தூதரும் ஆவார்கள் எனவும் சான்று பகர்கின்றேன். அல்லாஹ், இறுதித் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் மேலான குடும்பத்தவர்கள், கண்ணியம் நிறைந்த தோழர்கள் ஆகியோர் மீதும் சாந்தி சமாதானம் ஆகியவற்றை நல்குவானாக!

﴿ يا أيُّها الذينَ آمنوا اتَّقوا الله حقَّ تُقاتِهِ ولا تَمُوتُنَّ إلاّ وأنتم مُسْلِمون﴾[آلِ عمران الآية ١٠٢]

*"இறை நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு (அவன் ஏவியவைகளைக் கடைப்பிடித்தும், தடுத்தவைகளை விட்டொதுக்கியும்) அஞ்சவேண்டிய முறைப்படி அஞ்சுங்கள். மேலும், நீங்கள் முஸ்லிம்களாக அன்றி மரணமடைய வேண்டாம்."*

(அல் குர்ஆன் 3:102)

﴿يا أيُّها النّاسُ اتّقوا ربَّكُمُ الّذي خَلَقَكُمْ من نفسٍ واحدَةٍ ، وخَلَقَ مِنها زوجَها وَبَثَّ مِنْهُمَا رِجالاً كثيراً ونِساءً ، واتّقوا الله الّذي تساءَلُونَ بِهِ والأَرحامَ إنَّ الله كَانَ عليْكُم رقيباً ﴾[النساء الآية ١]

*"மனிதர்களே! உங்களை ஓர் ஆன்மாவிலிருந்து படைத்த உங்களின் இறைவனுக்கு நீங்கள் அஞ்சுங்கள். மேலும், அதே ஆன்மாவிலிருந்து அதனுடைய துணையை அவன் உண்டாக்கினான். மேலும், அவை இரண்டின் மூலம் (உலகில்) அதிகமான ஆண்களையும், பெண்களையும் பரவச் செய்தான். மேலும், எந்த அல்லாஹ்வின் பெயரைக் கூறி நீங்கள் ஒருவர் மற்றவரிடம் (உரிமைகளைக்) கோருகின்றீர்களோ, அந்த அல்லாஹ்வுக்கே நீங்கள் அஞ்சுங்கள். மேலும், இரத்த பந்த உறவுகளை சீர்குலைப்பதிலிருந்து நீங்கள் விலகிக் கொள்ளுங்கள். திண்ணமாக அறிந்து கொள்ளுங்கள்: அல்லாஹ் உங்களைக் கண்காணித்துக் கொண்டிருக்கின்றான்.*

(அல் குர்ஆன் 4:01)

﴿ يا أيُّها الَّذين آمنواْ اتَّقواْ الله وقولواْ قولاً سَديداً ، يُصلِح لكُمْ أعمالَكُم ويَغفِرْ لَكُمْ ذُنوبَكُمْ ، ومن يُطِعِ الله ورسُولَهُ فقدْ فازَ فَوْزاً عَظِيماً ﴾ [ الأحزاب ، الآية ٧٠، ٧١]

*"நம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். மேலும், நேர்மையான சொல்லை மொழியுங்கள். அல்லாஹ் உங்களுடைய செயல்களைச் சீர்திருத்தி விடுவான்; மேலும், உங்களுடைய குற்றங்களை மன்னிக்கவும் செய்வான். எவன் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்படிகின்றானோ, அவன் மகத்தான வெற்றியடைந்து விட்டான்."*

(அல் குர்ஆன் 33:70,71)

பின்னர், அறிந்து கொள்ளுங்கள்:... أما بعد . .

فإنَّ أصدق الحديثِ كتابُ الله تعالى ، وخيرَ الهدي هديُ محمدٍ صلى الله عليه وآله وصَحْبِهِ وسلَّمَ ، وشرَّ الأمورِ محدثاتُها ، وكُلَّ مُحْدَثَةٍ بدعةٍ ، وكُلَّ بدعةٍ ضلالةٌ ، وكُلَّ ضلالَةٍ في النار ،..

"வசனங்களுள் மிகச் சிறந்தது இறைவசனம் (குர்ஆன்) ஆகும். வழிகாட்டல்களுள் மிகச் சிறந்தது முஹம்மத் (ஸல்) அவர்களுடைய வழிகாட்டலாகும். தீனிலே (இஸ்லாத்திலே) மிகவும் தீய செயல்கள் (இஸ்லாத்தின் மிகச் சரியான போதனைகளுக்கு மாறான) புதிதாய் தோற்றுவிக்கப்படும் நூதனச் செயல் (பித்அத்)களாகும். ஒவ்வொரு நூதனச் செயலும் வழிகேடாகும். வழிகேடான ஒவ்வொன்றும் நரக நெருப்பின்பால் இழுத்துச் செல்லக் கூடியனவாகும்."

(முஸ்லிம்)

உங்கள் கரங்களில் தவழும் இந்நூல் பெண்களின் இயற்கையான இரத்தப் போக்கு பற்றி முஸ்லிம் ஆண்கள் பெண்கள் ஆகியோருக்கு எடுத்துக் கூறும் முயற்சியின் பயனாய் உருவானதாகும்.

பல பெண்கள் இது தொடர்பாகக் கேட்கின்றார்கள். எனவே, புனிதக் குர்ஆனையும், நபி (ஸல்)

அவர்களின் நம்பகமான ஹதீஸ்களையும் அடிப்படையாகக் கொண்டு இது தொடர்பான பயனுள்ள விளக்கங்களைத் தருவது மிக அவசியம் என நான் கருதினேன். அதன் விளைவாக, செய்க் முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உதைமீன் அவர்களது 'அத்திமாஉ அத்தபஇய்யத்து லின்னிஸாஃ' என்ற நூலை, இதன் தலைப்புக்குப் பொருந்தும் வினா விடைகள் சிலவற்றையும் இணைத்து, அரபியிலிருந்து மொழி பெயர்த்து சமர்ப்பிக்கின்றேன்.

இதனை அழகாக செய்து முடிக்க அருள் பாலித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். இது தொடர்பாக எனக்கு ஆக்கமும் ஊக்கமும் வழங்கிய செய்க் முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உதைமீன் அவர்களுக்கு நன்றியுடையேன். இப்பணியில் நேரடியாகவோ, மறைமுகமாகவோ பங்களித்த ஒவ்வொருவரது முயற்சியையும் ஏற்று அங்கீகரித்து அருற் புரியுமாறு வல்ல அல்லாஹ்வை - அவனது சிறப்புப் பெயர்களையும் பண்புகளையும் கொண்டு வேண்டி நிற்கின்றேன்.

அல்லாஹ்வின் கருணையை நாடி நிற்கும்,
கலாநிதி ஸாலிஹ் அஸ் ஸாலிஹ்

ஹிஜ்ரி 11 - 07 - 1413.
கி.பி. 04 - 01 - 1993.

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய
அல்லாஹ்வின் திருநாமத்தால்....

# அறிமுகம்

அல்லாஹ் ஒருவனுக்கே அனைத்துப் புகழும் உரித்து. நாம் அவனைப் புகழ்ந்து அவன் உதவியையும் பாவ மன்னிப்பையும் வேண்டி நிற்கின்றோம். மிகவும் கண்ணியம் பொருந்திய அல்லாஹ்விடம் நாம் பாவங்கள், கெட்ட செயல்கள் ஆகியவற்றில் வீழ்ந்து விடுவது தொடர்பான பாதுகாப்பை நாடி நிற்கின்றோம். அல்லாஹ்வின் வழிகாட்டல் எவருக்குக் கிடைக்கின்றதோ அவரை எவரும் வழிகெடுத்து விட முடியாது; அத்துடன், எவருக்கு அல்லாஹ்வின் வழிகாட்டல் கிடைக்கவில்லையோ அவரை எவரும் நல்வழி படுத்திடவும் முடியாது. மேலும், அல்லாஹ்(சு.வ)[1] ஒருவனே வணக்கத்திற்கும் வழிபாட்டிற்கும் உரியவன் என நான் சான்று பகர்கின்றேன். மேலும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனின் அடிமையும் திருத்தூதரும் ஆவார்கள் எனவும் சான்று பகர்கின்றேன். அவனது ஸலாத்தும்[2] ஸலா(சமாதான)மும் அவன் தூதர் அவர்கள் மீது உண்டாவதாக!

பெண்களைப் பொறுத்தவரையில், அவர்களுக்கு மூன்று விதமான மாதவிடாய்கள் இருக்கின்றன என்பது தெளிவானதே.

1. குறித்த காலத்திலான மாதவிடாய்
2. இஸ்திஹாதாஹ் (குறித்த காலத்திற்கிடையில் பெண்ணின் கருப்பையிலிருந்து வெளிவரும் இரத்தம்)
3. நிஃபாஸ் (பிரசவத்தின் பின் வெளிவரும் இரத்தம்)

இவை தொடர்பாக குர்ஆனினதும், சுன்னாஹ்வினதும் ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டு விளக்கம் பெறுவது மிகவும் முக்கியமானதாகும்; பயனுள்ளதாகும். ஏனெனில்,

அ) அல்லாஹ்வின் கட்டளைகள் அனைத்தையும் தரும் மூலங்களாக இருப்பவை குர்ஆனும் சுன்னாஹ்வுமாகும்.

ஆ) தொழுகைக்கு அவசியமானவற்றை (மாதவிடாயிலிருந்து சுத்தமாகும் முறையை) அறிந்து கொள்வதில் இந்த (இஸ்லாமிய) மூலங்கள் வாயிலாக விளக்கம் பெற்றுக்கொள்ளும் பொழுது - ஒருவகையான அமைதியும், ஆறுதலும், நிம்மதியும், நிறைவும் ஏற்படுவதை ஒருவர் நன்கு உணரலாம்.

இ) ஏனைய எந்த மூலத்திலான விளக்கமாயினும் அது குர்ஆன் சுன்னாஹ் ஆகியவற்றின் ஆதாரங்களைத் தருவதில் குறையுள்ளதாகவும் பூரணத்துவம் அற்றதாகவுமே இருக்கும்.

---

1. (சு.வ) சுபஹானஹு வதஆலா - 'மிகுந்த மேன்மையும் கண்ணியமும் பொருந்தியவன்' என்பது கருத்து.

2. ஸலாத் - 'அல்லாஹ்வின் சாந்தி அவன் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது உண்டாவதாக!' என்பதன் கருத்து. அல்லாஹ்வின் போற்றுதலும், விண்ணில் மிக உயர்வான இடத்தில் இருக்கும் மலக்குகளுக்கு அவர்கள் பற்றி பிரஸ்தாபித்தலுமாகும். மலக்குகளும் எல்லா விசுவாசிகளும் நபிகளார் மீது ஸலாத் மொழியும்படி வேண்டப் படுகின்றனர்.

﴿ إن الله وملائكته يصلون على النبي يا أيها الذين آمنوا صلوا عليه وسلموا تسليما ﴾ (الأحزاب: ٥٦)

*"அல்லாஹ்வும் அவனுடைய வானவர்களும் நபியின் மீது ஸலவாத் எனும் நல்வாழ்த்துகளை அனுப்புகின்றார்கள். விசுவாசிகளே! நீங்களும் அவர் மீது ஸலவாத்தும் ஸலாமும் சொல்லுங்கள்."*

(அல் குர்ஆன் 33:56)

அடுத்துள்ள ஆதாரம் என்னவெனில், குர்ஆனுக்கும் சுன்னாஹ்வுக்கும் எது விடயத்திலும் முரண்படாத ஸஹாபாக்களுள் (நபி (ஸல்)[3] அவர்களுடைய தோழர்கள்) அறிஞர்களானோரின் ஏற்றுக்கொள்ளப்பட்ட கூற்றுக்கலாகும். சிலவேளை, மற்றொரு ஸஹாபியால் முரண்பட்ட கூற்றொன்று கூறப்பட்டு இருக்குமாயின், அப்பொழுது குர்ஆனுக்கும் சுன்னாஹ்வுக்கும் மிக நெருங்கிய ஆதாரங்களைக் கொண்டு நிரூபணமான கூற்றை ஆராய்ந்தெடுப்பது அவசியமாகும்.

அல்லாஹ் இவ்வாறு கட்டளையிடுகின்றான்:

﴿ فإن تنازعتم في شيء فردُّوهُ إلى الله والرسول ، إن كنتم تؤمنون بالله واليوم الآخر ذلك خير وأحسن تأويلاً ﴾

*"பின்னர், ஏதேனும் விவகாரத்தில் நீங்கள் கருத்து வேறுபாடு கொண்டால் அதனை அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் திருப்பிவிடுங்கள். நீங்கள் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டோராயின் இதுதான் சரியான வழிமுறையாகும்; இறுதி விளைவின் கோணத்திலிருந்து பார்த்தாலும் இதுவே சிறந்தது."*

(அல் குர்ஆன் 4:59)

இத்தகைய எண்ணத்துடன் மாதவிடாய் தொடர்பான இஸ்லாமிய சட்டங்களைத் தொகுத்து இங்கு சமர்ப்பிக்கின்றேன். இதில் கீழ்க்காணும் பிரதான தலைப்புக்களில் விவரங்கள் தரப்பட்டுள்ளன.

1. மாதவிடாய் என்றால் என்ன?
2. மாதவிடாய்க் காலமும் அதன் தவணையும்
3. மாதவிடாய் தொடர்பான வித்தியாசங்கள்
4. மதாவிடாய் தொடர்பான சட்டங்கள்
5. இஸ்திஹாதாஹ்வும் அதன் சட்டங்களும்
6. நிஃபாஸும் அதன் சட்டங்களும்
7. மாதவிடாயை ஒழுங்குபடுத்துபவைகள்



3. (ஸல்) ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம் : 'அல்லாஹ்வின் சாந்தியும் சமாதானமும் அவன் தூதர் முஹம்மத் அவர்கள் மீது உண்டாவதாக' என்பது இதன் கருத்து.

1

# மாதவிடாய் என்றால் என்ன?

அரபு மொழியில் 'ஹைளு' (மாதவிடாய்) என்றால் ஏதேனும் ஊற்றுதல், கொட்டுதல் அல்லது வடிதல் என்று பொருள்படும். இஸ்லாத்தின்படி - எத்தகைய வெளிக்காரணமுமின்றி, ஒரு குறிப்பிட்ட கால எல்லையில் பெண்களிடமிருந்து இயற்கையாக வெளிப்படும் இரத்தத்தையே இது குறிக்கின்றது. எனவே, இயற்கையாக வெளிப்படும் இந்த இரத்தப் போக்கை ஏதோவொரு நோயுடன் அல்லது காயம், கருச்சிதைவு, பிரசவம், என்பவற்றின் இரத்தப் போக்குடன் இணைத்து நோக்குதல் கூடாது.

பெண்களுக்கு ஏற்படும் இந்த மாதவிடாய் - அவர்களுடைய தேக நிலை, சூழல், உடனடியாக ஏற்படும் சுற்றுப்புறத் தாக்கங்கள் ஆகியவற்றைப் பொறுத்து மாறுபடும் தன்மையுடையதே.

இது தொடர்பான அறிவு, மகத்தான பேருண்மை ஒன்றை நமக்கு உணர்த்தி நிற்கின்றது.

அந்தப் பேருண்மை இதுதான்:

ஒரு தாயின் கருவறையில் தரித்துவிடும் சின்னஞ்சிறு உயிருக்கு மனிதருள் மிகக் கருணை உள்ளவர்களிடமிருந்து கூட ஒருவேளை சத்துள்ள உணவைப் பெற்றுக் கொள்ள முடியாது. இந்த நிலையில், பெரும் கண்ணியமும் ஒழுங்கான படைப்பாற்றலும் உடைய வல்ல அல்லாஹ், மிகவும் சிறப்பான இரத்த ஓட்ட முறையொன்றை (பெண்ணுள்) அமைத்துள்ளான். அந்த முறைக்கமைய உருவாகும் சத்துள்ள உணவை கொப்பூழ்க் கொடி மூலம் கருவறையிலுள்ள உயிருக்குக் கிடைக்கச் செய்கின்றான். இதுதான் ஒரு பெண் கருத்தரித்துவிட்டபோது மாதவிடாய் நிற்பதற்குக் காரணம். அக்கால எல்லையில் அவள் மிக அரிதாகவே இரத்தப் போக்குக்கு ஆளாவாள்.



2

# மாதவிடாய்; ஆரம்ப முடிவு வயது!

## இதற்கு வயதெல்லை உண்டா?

ஒரு பெண்ணுக்கு பன்னிரண்டு வயதிற்கும் ஐம்பது வயதிற்கும் இடைப்பட்ட காலத்தில் மாதவிடாய் உண்டாகும். ஆயினும், அவளது தேக நிலை, சூழல், சுற்றுப்புற நிலைமைகளைப் பொறுத்து இது முன் பின் உண்டாகலாம். கண்ணியமிக்க உலமாக்(இஸ்லாமிய அறிஞர்)கள் மாதவிடாய்க்கான குறித்த வயதுக் காலம் பற்றிய கால வரையறை உண்டா என்பதிலும், இந்த மாதவிடாய் கால எல்லைக்கு முன் பின் வெளியாகும் இரத்தம் தொடர்பாக, அது அவளது மாதவிடாய் இரத்தமா அல்லது வேறேதும் இரத்தமா? என்பதிலும் மாறுபட்ட கருத்துடையவர்களாக இருக்கின்றார்கள்.

இது தொடர்பான வித்தியாசமான கருத்துக்களை முன்னிறுத்தி பேசிய இமாம் அத் தாரிமீ[4] அவர்கள் கூறினார்கள்:

"என்னைப் பொறுத்த வரையில் இவை எல்லாமே பிழையானவை! ஏனெனில், ஒருவரின் வயதை கருத்தில் கொள்ளாது அவருக்கு இரத்தம் வெளியாகியுள்ளதா இல்லையா என்பதைப் பார்ப்பதைத்தான் நாம் கவனத்தில் கொள்ளவேண்டும். இவ்வாறு வெளியான இரத்தத்தை மாதவிடாய் இரத்தம் என்றே கொள்ள வேண்டும். *அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவன்!*"

இமாம் அத் தாரிமீ அவர்கள் கூறியதே மிகவும் சரியானது. செய்குல் இஸ்லாம் இப்னு தைமிய்யா[5] (ரஹ்) அவர்களும் இதே கருத்தைத்தான் கொண்டுள்ளார்கள்.

எனவே, ஒரு பெண் *தன்னிடம் இரத்தம்* வெளிவரக் *கண்டால்* அதை மாதவிடாய் என்றே கருத வேண்டும். அப்பொழுது அவள் ஒன்பது வயதை விடக் குறைவாகவோ அல்லது ஐம்பது வயதை விடக்

---

4. அத் தாரிமீ : இஸ்லாமிய அறிஞர்களுள் மிகவும் பிரபலமான ஒருவர். ஹிஜ்ரி 181 ல் பிறந்தவர். இமாம்களான முஸ்லிம், அபூதாவுத், *திர்மிதீ உட்பட பலர் இவரை மேற்கோள் காட்டியுள்ளார்கள். இவர் நீண்ட பிரயாணங்கள் செய்ததுடன் பல இஸ்லாமிய விளக்கங்களுக்குப்* பொறுப்புடையவராகவும் இருந்தவர். ஹிஜ்ரி 255ல் மரணமானார்.

5. இப்னு தைமிய்யா : இஸ்லாமிய பேரறிஞரான இவர் கி.பி. 1263 ல் பிறந்தார். அவரது ஆரம்ப வயதில் பல்வேறு இஸ்லாமியக் கலைகளில் ஆழ்ந்த பாண்டித்தியம் பெற்றார். நபி (ஸல்) அவர்களின் சுன்னாஹ்வை மிகப் பலமாக ஆதரித்த இவர், தன்னை பலமுறை சிறையிலிடக் காரணமாக சதி செய்த தத்துவ வாதிகள் மற்றும் படித்தவர்கள் குழுக்கள் இஸ்லாத்தில் இடை செருக முனைந்த பலவற்றை மிகக் கடுமையாக எதிர்த்து நின்றார். அதோடு, பாரிய சிரியாவிலான தாத்தாரிய படை எடுப்பை எதிர்த்துப் போராடி முஸ்லிம்களைப் பாதுகாப்பதில் மிகத் தீவிரமாக ஈடுபட்டார். இவர் இஸ்லாத்தில் இடைச்செருகல் செய்வோர் தொடர்பாக வெளியிட்ட ஃபத்வா (இஸ்லாமிய சட்டத் தீர்ப்பு)வையொட்டி கைது செய்யப்பட்டு டமஸ்கஸ் சிறையிலிருக்கும் போது, கி.பி. 1328ல் மரணமானார். இஸ்லாமிய அறிவைப் பெற விரும்புவோருக்கு அவரது எழுத்தாக்கங்கள் மிகப் பெரும் பயனுடையவைகளாக இப்பொழுதும் *இருக்கின்றன. அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொள்வானாக.*

கூடுதலாகவோ இருக்கின்றாள் என்பதைக் கருத்தில் கொள்ளக் கூடாது. ஏனெனில், ஒரு பெண்ணிடம் எப்பொழுதும் இரத்தம் வெளிவரக் கண்டால் அதை மாதவிடாய் என்றே கொள்ள வேண்டும் என அல்லாஹ்வும் அவன் தூதர் அவர்களும் நெறி வகுத்துள்ளார்கள். அன்றி, மாதவிடாய் ஆரம்பமாவதற்கும் முடிவதற்கும் அந்நெறியில் குறித்த வயதெல்லை குறிப்பிடப்பட வில்லை. உண்மையில் இது தொடர்பான வயதெல்லையை வகுக்க குர்ஆனினதும் சுன்னாஹ்வினதும் ஆதாரம் அவசியமாகின்றது. ஆனால், அத்தகைய ஆதாரங்கள் எதுவுமே அவற்றில் இல்லை.

## மாதவிடாய் நீடிக்கும் கால எல்லை

ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் உண்டாகிவிட்டால் அது எவ்வளவு காலம் நீடிக்கும் என்பதில் உலமாக்களிடையே பெரும் வாதப் பிரதிவாதங்களும் சர்ச்சைகளும் இருக்கின்றன. சில உலமாக்கள், "மாதவிடாய் மிகச் சாதாரணமாகவோ அன்றி பாரிய அளவிலோ இருந்தாலும் அதற்குரிய நாட்கள் இவ்வளவுதான் என்ற வரையறையில்லை!" எனக் கூறுகின்றார்கள். இந் நூலாசிரியர், "இது (முன்னர்) அத்தாரிமீ அவர்கள் கொண்ட கருத்துக்கும், சைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் வழி மொழிந்த கருத்துக்கும் இணக்கமானதே!" என்கின்றார். இதுவே சரியான கருத்து. ஏனெனில், இது குர்ஆனினதும் சுன்னாஹ்வினதும், ஒப்புதலுடைய கருத்துக்களினதும் ஆதாரங்களைக் கொண்டு உறுதிபடுத்தப்பட்டுள்ளது.

### ஆதாரம் – 1:

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿ ويسألونَكَ عن المحيضِ قل هُو أذًى فاعتزلوا النساءَ في المحيضِ ولا تقرَبُوهُنَّ حتى يطْهُرن ﴾ [ البقرة ، الآية ٢٢٢ ]

*"இன்னும் மாதவிடாய் (குறித்த சட்டம்) பற்றியும் உம்மிடம் கேட்கின்றார்கள். நீர் கூறும்: 'அது தூய்மையற்ற நிலை; ஆகவே மாதவிடாய்க் காலத்தில் பெண்களை விட்டு விலகி இருங்கள்; மேலும், அவர்கள் சுத்தமாகும் வரை அவர்களை அணுகாதீர்கள்."*

(அல் குர்ஆன் 2:222)

இங்கு அல்லாஹ், சட்ட ரீதியான உடலுறவு இன்பத்தைப் பெறுவதிலிருந்து (ஆண்கள்) ஒதுங்கி நிற்பதற்கு 'மாதவிடாய் காலத்தில் பெண் அசுத்தமுற்று இருக்கின்றாள்' என்பதையே காரணமாகக் காண்பிக்கின்றான் என்பது மிகத் தெளிவானதே. அவ்வாறின்றி, ஓர் இரவு, ஒரு நாள், மூன்று நாட்கள், பதினைந்து நாட்கள் என கால எல்லையொன்றை அவன் வகுத்துத் தரவில்லை. மாதவிடாய் (சுத்தமற்ற நிலை) உண்டு அல்லது அவ்வாறு இல்லை (சுத்தமாகவே இருக்கின்றாள்) என்பது தொடர்பாக அல்லாஹ் வகுத்துத் தரும் நெறிமுறை நமக்கோர் ஆதாரமாகவுள்ளது.

## ஆதாரம் – 2:

ஆயிஷா (ரலி)[6] அவர்கள் உம்ரா[7]வுக்காக இஹ்ராம்[8] அணிந்த பின் மாதவிடாய் ஏற்பட்டால் என்ன செய்ய வேண்டும் என நபி (ஸல்) அவர்கள் கொடுத்த விளக்கம் ஆதாரபூர்வமான ஹதீஸ் கிரந்தத்தில் காணப்படுகின்றது. இது எதனை உறுதிப் படுத்துகின்றது என ஆராய்ந்துப் பார்ப்போம்.
அவர்கள் கூறினார்கள்:

"(அங்கு) ஒரு யாத்ரீகர் செய்ய வேண்டிய எல்லாவற்றையும் செய்யுங்கள். ஆனால், (மாதவிடாயிலிருந்து) சுத்தமாகும் வரை கஃபாவை தவாஃப் செய்வதை (வலம் வருவதை) செய்ய வேண்டாம்.[9] அவர் (ஆயிஷா) கூறினார்: நஹ்ர் தினத்தில் (துல்ஹஜ் 10 ஆம் தினம்) நான் சுத்தமானேன்."

மற்றோர் ஆதாரபூர்வமான ஹதீஸ் கீழ்க்கண்டவாறு விளக்கம் தருகின்றது:

"நபி (ஸல்) அவர்கள் அவரு(ஆயிஷாவு)க்குக் கூறினார்கள்: "நீங்கள் மாதவிடாயிலிருந்து சுத்தமடையும் வரை காத்திருந்து, அதன்பின் 'அத்தன்ஈம்' (மக்காவிலான ஓர் இடம்) செல்லுங்கள். "அங்கு இஹ்ராம் அணிந்து (உம்ரா செய்த பின்) அத்தகைய இடத்தில் எம்முடன் இணைந்து கொள்ளுங்கள்."[10]

நபி (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களை ஹஜ் கிரியைகளை செய்வதிலிருந்து தடுத்து நிறுத்தக் காரணமாக இருந்தது அப்போதைய அவர்களது சுத்தம் தொடர்பான அம்சங்களே என்பது தெளிவாகின்றது. அன்றி, அவர்களின் மாதவிடாயின் போது வெளிவரும் இரத்தம் தொடர்பான கால எல்லையொன்றை அவர்கள் வகுத்துக் கூறவில்லை. எனவே, இது தொடர்பான இஸ்லாமிய சட்டம் மாதவிடாய் இரத்தம் வெளிப்படுவதையும் அது அல்லாத நிலையையும் பொறுத்து அமைவதைக் காணலாம்.

## ஆதாரம் – 3:

பெண்களின் மாதவிடாய் ஆரம்பமாகும் வயதும் முடியும் வயதும் பற்றி சில சட்ட அறிஞர்கள் மதிப்பீடுகளும் விளக்கங்களும் தந்துள்ளனர். எனினும் அவை அல்லாஹ்வின் அருள்மறையி(குர்ஆனி)லோ, நபி (ஸல்) அவர்களின் சுன்னாஹ்விலோ காணப்படவில்லை. இந்த மதிப்பீடுகளை நன்கு விளங்குவதும், அல்லாஹ்வுக்கான வணக்க வழி பாடுகளில் பயன்படுத்துவதும் கட்டாயக் கடமையாயின், அல்லாஹ்வும் அவன் தூதர் (ஸல்) அவர்களும் இது பற்றி ஒவ்வொருவரும் தெளிவாக அறிந்து கொள்ள செய்திருப்பார்கள்

---

6. (ரலி) ரலியல்லாஹூ அன்ஹா : 'அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொள்வானாக!' என்பது இதன் கருத்து.

7. உம்ரா : மக்காவுக்கான புனிதப் பயணம். இப் பயணத்தின் போது கஃபாவை ஏழு முறை தவாஃப் செய்வது (வலம் வருவது)ம், சஃபா மர்வா குன்றுகளிடையே ஏழுமுறை ஸஈ செய்வதும் இடம் பெறும்.

8. இஹ்ராம் : இதன் நேரடி சொல் கருத்து 'பரிசுத்தமடைவது: தூய்மைக்குட்படுவது' என்பதாகும். நபி (ஸல்) அவர்களின் சுன்னாஹ்வின்படி குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த உடையணிந்து, சில செயல்களிலிருந்து ஒதுங்கியிருத்தலையே இச் செயல் குறிக்கும். இது நபி (ஸல்) அவர்களால் கூறப்பட்ட 'மவாகீத்' எனும் இடங்களில் செயலுக்குக் கொண்டுவரப்படுகின்றது.

9. ஸஹீஹுல் புகாரி (அரபு – ஆங்கிலம்) Vol. 1, பக் : 182 – 3, ஹதீஸ் எண் : 302.

10. ஸஹீஹுல் புகாரி (அரபு – ஆங்கிலம்) Vol 3, பக் : 9, ஹதீஸ் எண் : 15.

என்பதில் ஐயமில்லை. இஸ்லாமிய சட்டங்கள், இறை வழிபாடு தொடர்பான பல்வேறு அம்சங்களில் அந்த அளவுக்கு முக்கியத்துவமிக்கதாய் ஆதிக்கம் செலுத்துவதே அதற்குக் காரணமாகும். மாதவிடாய், அதற்கான விளக்கங்கள், சட்டங்கள் ஆகியவற்றைச் சார்ந்திருப்பது தொழுகை, நோன்பு, விவாகம், விவாகரத்து, வாரிசுச் சொத்து போன்றவை அவற்றிற்குரிய இஸ்லாமியச் சட்டங்களைச் சார்ந்து நிற்பது போன்ற தன்மைக்குச் சமமானதேயாகும்.

அல்லாஹ்வும் அவன் தூதர் (ஸல்) அவர்களும் கீழ்க்காண்பவைப் பற்றி இவ்வாறு விளக்கம் தந்துள்ளதை நாம் அறிவோம்.

* தொழுகை. – இதற்கான எண்ணிக்கை, நேரம், ருகூஉ, சுஜூத் என்பன.
* ஸகாத்[11] – இதற்கான செல்வம், சொத்து வகைகள்; நிஸாப்[12] எனும் அளவு, இதனைப் பெறுவோர் என்பன.
* நோன்பு – இதற்குரிய காலமும், ஒரு நாளின் குறிப்பிட்ட (நோன்பு நோற்க வேண்டிய) நேரமும் பற்றியன.
* ஹஜ் – இதன் கடமைகளும் விதிகளும் பற்றியன.
* அன்றாட வாழ்விலான உண்ணல், பருகல், உறங்குதல், மனைவியுடன் உடலுறவு கொள்ளுதல், அமருதல், வீட்டிற்குள் பிரவேசித்தல், வெளியே செல்லுதல், மலசலம் கழித்தல், இஸ்திஜ்மார்[13] செய்வதில் எத்தனைக் கற்கள் பயன்படுத்துதல் ஆகியன.

இவ்வாறு, வாழ்வின் ஒவ்வொரு நிமிடத்திலும் செய்ய வேண்டிய அற்ப விடயத்திலிருந்து ஆகப் பெரிய விடயம் வரை, எவ்வாறு செய்ய வேண்டும் என்பதை, அல்லாஹ் தன் மார்க்கத்தின் மூலம் பூரணமாகத் தெளிவுபடுத்தி தனது விசுவாசிகளுக்கு அருள் புரிந்துள்ளான்.

அல்லாஹ் கூறுகின்றான்:

﴿ ونزلنا عليك الكتاب تبيانا لكل شيء ﴾ [ النحل، الآية ٨٩ ]

*"(நபியே!) உமக்கு இவ்வேதத்தை நாம் இறக்கியருளியுள்ளோம். இது யாவற்றையும் மிகத் தெளிவாக விவரிக்கக் கூடியதாய் இருக்கின்றது."*

(அல் குர்ஆன் 16:89)

﴿ ما كان حديثا يفترى ولكن تصديق الذي بين يديه وتفصيل كل شيء ﴾ [ يوسف، الآية ١١١ ]

11. ஸகாத்: இஸ்லாம் வகுத்துள்ள சட்ட திட்டங்களுக்கமைய வசதி படைத்த முஸ்லிம்களிடமிருந்து திரட்டி எடுத்து வசதியற்றோருக்கு வழங்கும் குறிப்பிட்டதொரு தர்மம். இஸ்லாம் வகுத்துள்ள கட்டாயக் கடமைகளுள் இதுவும் ஒன்று.

12. நிஸாப்: இது ஒரு வருட இறுதியில் ஒரு முஸ்லிம் தன்னிடம் கொண்டுள்ள ஆகக் குறைந்த அளவு சொத்தைக் குறிக்கும். ஒருவர் இவ்வாறு வைத்துள்ள சொத்தின் வகை, அளவு என்பவற்றிற்கமையவே ஸகாத் எனும் வரி நிர்ணயிக்கப்படும். பணத்தைப் பொறுத்தவரையில் ஒருவரின் வருடாந்த நிகர இருப்பிலிருந்து 2.5% ஸகாத் பெறப்படும்.

13. இஸ்திஜ்மார்: ஒருவரின் மறைவான பகுதிகளை ஒற்றை எண்ணிக்கை கொண்ட கற்களால் சுத்தப்படுத்துவதைக் (மூன்று கற்களை விடக் குறைவில்லாமல்) குறிக்கும். நபி (ஸல்) அவர்கள் மொழிந்தார்கள்: "யாரேனும் தமது மறைவான பகுதிகளைக் கற்களைக் கொண்டு சுத்தம் செய்வாராகில், ஒற்றை எண்ணிக்கை கற்களைக் கொண்டு சுத்தம் செய்யட்டும்." (ஸஹீஹுல் புகாரி, அரபு - ஆங்கிலம் Vol:1, பக்: 114, ஹதீஸ் எண்: 163)

*"(குர்ஆனில் விவரித்துக் கூறப்படுகின்ற) இச்செய்திகள் புனைந்துரைக்கப் பட்டவை அல்ல. மாறாக, (குர்ஆன் ஆகிய) இது தனக்கு முன் அருளப்பட்ட வேதங்களை மெய்ப்பிக்கக் கூடியதாகவும், ஒவ்வொன்றையும் விவரிக்கக் கூடியதாகவும் இருக்கின்றது."*

(அல் குர்ஆன் 12:111)

இருந்தும், (மாதவிடாய்த் தொடர்பான சட்ட அறிஞர்களின்) மதிப்பீடுகள் பற்றி அல்லாஹ்வின் அருள் மறையிலோ, நபி (ஸல்) அவர்களுடைய சுன்னாஹ்விலோ எதுவும் கூறப்படவில்லை. எனவே, ஒருவர் அவற்றைக் கருத்தில் கொள்ளாது ஒதுக்கிவிட முடியும் என்பது தெளிவாகின்றது. உண்மையில், (மேலே நிரூபித்துக் காட்டியமைக்கமைய) இது பற்றிய தீர்மானங்கள் எடுப்பது மாதவிடாய் இரத்தம் வெளிவந்துள்ளது அல்லது வெளிவரவில்லை என்பதைப் பொறுத்தே அமைய வேண்டும்.

இந்த விடயம் தொடர்பாகக் கருத்துப் பரிமாற்றம் செய்யும் பொழுது ஒரு முக்கியமான அம்சத்தை நாம் மறந்து விடக்கூடாது. அதாவது, அல்லாஹ்வின் அருள்மறையாம் அல் குர்ஆன், நபி (ஸல்) அவர்களின் சுன்னாஹ், நன்றாக அறிந்த இஜ்மாஉ,[14] அல்லது தெளிவான கியாஸ்[15] ஆகியவற்றுள் ஒன்றின் தெளிவான ஆதாரமின்றி இது பற்றிய இஸ்லாமியத் தீர்மானமொன்றை அங்கீகரிக்க முடியாது.

செய்குல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் தமது சட்டவரைவொன்றில் இவ்வாறு கூறுகின்றார்:

"... அதோடு இது போன்ற மாதவிடாயைப் பொறுத்து, அல்லாஹ் பல கட்டளைகளை தனது வேத நூலிலும் சுன்னாஹ்விலும் கூறியுள்ளான். ஆயினும், அது பற்றிய குறுகிய கால, நீண்ட கால எல்லைகளை வகுத்து எமக்கவன் தரவில்லை. மேலும், இந்த விடயம் தொடர்பாக முஸ்லிம் சமுதாயம் மிக அவசியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய கட்டாய நிலையில் கூட, அவன், ஒரு பெண் இரண்டு மாதவிடாய்களுக்கு இடையில் எவ்வளவு காலம் சுத்தமாய் இருப்பாள் என வரையறுத்துக் கூறவில்லை. மொழிவாரியாகக் கூட 'ஹயிளு' (மாதவிடாய்) என்பது ஒரு மதிப்பீட்டையோ வேறேதும் விளக்கத்தையோ குறித்துக் காட்டவில்லை.

---

14. இஜ்மாஉ : எந்தத் தலைமுறையையும் சார்ந்த தூய பக்திமிக்கவரும் நேர்வழி நடப்பவருமான முஸ்லிம் அறிஞர்களின் ஏகோபித்த கருத்தை இச்சொல் குறிக்கும். ஒரு விடயம் குறித்து குர்ஆனிலோ, சுன்னாஹ்விலோ நேராக(தெளிவாக)க் கூறப்படாவிடத்து, 'இஜ்மாஉ'வை தகுந்ததோர் ஆதாரமாகக் கொள்ளப்படும். (ஃபதாவா இப்னு தைமிய்யா Vol: 19, பக்: 5-8, 192-202). நபி (ஸல்) அவர்கள் பல்வேறு ஆதாரபூர்வமான ஹதீஸ்கள் மூலம் "தனது சமூகத்தில் உள்ள அறிஞர்கள் தவறான வழிகாட்டலிலும் பிழைகளிலும் ஒருமித்த கருத்தைக் கொள்ளமாட்டார்கள்." எனக் கூறியுள்ளார்கள். இதற்கமையவே இந்த இஜ்மாஉ என்பதுவும் நிலைத்து நிற்கின்றது. அல்லாஹ் இவர்களை இத்தவறுகளில் இருந்து பாதுகாக்கின்றான். ஏனெனில், அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு மிக நெருங்கிய தலைமுறையினராயிருக்கின்றனர். ஏகோபித்த (இஜ்மாஉ) கருத்துக்கு வருவதில் நபித் தோழர்களே மிகவும் பொருத்தமானவர்களாவர்.

15. கியாஸ் : குறிப்பிட்டதொரு விடயம் தொடர்பாக குர்ஆன், சுன்னாஹ், இஜ்மாஉ என்பவற்றின் தெளிவான விளக்கமும் முடிவும் கிடைக்காதபோது, எடுக்கப்படும் அனுமான முடிவை இச் சொல் குறிக்கும். இவ்வாறு எடுக்கப்படும் அனுமான முடிவு குர்ஆன், சுன்னாஹ், இஜ்மாஉ என்பவற்றின் ஆதாரத்துடன் எடுக்கப்பட்ட மற்றொரு முடிவுக்கு இணக்கமாகவே இருக்கும். உதாரணமாக, 'போதைப் பொருளான மாரிஜுவானா ஹராமானது; கூடாதது' என்ற அனுமான முடிவு "போதையூட்டும் அனைத்துப் பொருட்களும் மதுபானமாகும்; மதுபானங்களில் அனைத்துமே ஹராமாகும் (தடுக்கப்பட்டவையாகும்) (ஸஹீஹ் முஸ்லிம், ஆங்கில மொழி பெயர்ப்பு, Vol: 03, பக்: 1108, ஹதீஸ் எண்: 4963) என்ற ஹதீஸை அடிப்படையாக வைத்து எடுக்கப்பட்டதாகும். மாரிஜுவானாவில் போதையூட்டும் தன்மை இருப்பதால், அதை மதுபானமாகக் கொள்ளப்பட்டு, ஹராமாக்கப்படுகின்றது." (See 'The Evolution of Figh' by Abu Ameenah Bilal Philips (1988) பக் : 60, The Thouheed Publications, Riyadh, Saudi Arabia.)

எனவே, யாரேனும் ஒருவர் மாதவிடாய் தொடர்பாக குறித்த கால எல்லையொன்றை வகுக்க முனைவாராகில் அவரோ:அவளோ குர்ஆனுக்கும் சுன்னாஹ்வுக்கும் இணக்கமற்ற நிலையொன்றைக் கொண்டுள்ளார் என்பது தெளிவாகின்றது!"

## ஆதாரம் - 4:

கியாஸ்: அல்லாஹ் மாதவிடாயை வேதனை மிக்கதும், தூய்மையற்றதுமென கூறியுள்ளான். எனவேதான், அது ஒரு பெண்ணுக்கு உண்டாகி இருக்கும்போது உடலுறவு கொள்ளக்கூடாது என கூறப்படுகின்றது. மாதவிடாய் உண்டாகியுள்ள வேளையில் சுத்தமற்றத் தன்மையும் இருக்கின்றது என்பது நாமறிந்த விஷயம். இதில் - இரண்டாம் முதலாம் நாட்களுக்கிடையில், நான்காம் மூன்றாம் நாட்களுக்கிடையில், பதினாறாம் பதினைந்தாம் நாட்களுக்கிடையில், பதினெட்டாம் பதினேழாம் நாட்களுக்கிடையில் என எத்தகைய வேறுபாடும் வித்தியாசமுமில்லை. ஏனெனில், மாதவிடாய், 'மாதவிடாய்' என்ற நிலையில் வேதனைத் தருவதாகவும், தூய்மையற்றதாகவும் இருக்கிறது. இது மாதவிடாய் உள்ள எல்லா நாட்களிலும் சமமாகவே காணப்படும் நிலையாகும்.

எனவே, மாதவிடாய் தொடர்பான நடைமுறை காரணிகளைக் கொண்டு இரண்டு நாட்களுக்கும் உரியதான சட்ட முடிவு இருக்கும் பொழுது ஒரு நாளுக்கு ஒன்று என்ற வகையில் அமையப்பெறும் வெவ்வேறான சட்ட முடிவுகளை எவ்வாறு அங்கீகரிக்க முடியும்? இது தூய கியாஸுக்கு எதிரானதாகும். இரண்டு நாட்களுக்கும் சமமாக சட்ட முடிவுகளைப் பயன்படுத்துவது என்ற ரீதியில் சிந்திப்பது தூய கியாஸ் எனக் கொள்ள முடியாதா? ஏனெனில், அந்தச் சட்ட முடிவுகளை சமமாக கொண்டு வருவதற்கான காரணிகள் அவ்விரண்டு நாட்களிலும் தங்கியுள்ளன.

## ஆதாரம் - 5:

மாதவிடாய்க்கான குறிப்பிட்ட கால எல்லையை வகுத்துக் கூறுவோரது உடன்பாடில்லாத, சிக்கலான கூற்றுக்களுக்கு ஆதாரங்கள் தரப்படவில்லை. இவை இஜ்திஹாத்[16] மூலமே கொண்டு வரப்பட்டன. இவை பிழையாகவோ சரியாகவோ இருக்க முடியும். இவற்றுள் ஒரு கருத்து மற்றொரு கருத்தை விட மிகைத்து நிற்கவில்லை. இத்தகைய பிரச்சினைக்குரிய விடயங்களில் குர்ஆனையும் சுன்னாஹ்வையும் அணுக வேண்டியது அவசியமாகும்.

இப்பொழுது இது விடயம் நன்கு தெளிவாகி இருக்கும். அதாவது, மாதவிடாயைப் பொறுத்த வரையில் உள்ள உறுதியான தீர்மானம் என்னவெனில், குறுகிய அல்லது நீண்ட கால வரையறை எதுவும் அதற்கு இல்லை என்பதாகும். மாறாக, (காயம் அல்லது அது போன்ற ஒன்றிலிருந்தன்றி) பெண்கள் இயற்கையாக இரத்தம் வெளிவரக் கண்டால் அதை மாதவிடாய் என்றே கருத வேண்டும். இது தொடர்பாகக் கால வரையறைகள் சார்ந்த மதிப்பீடுகளையோ வயதெல்லையையோ கருத்திற் கொள்ளக் கூடாது. ஆனால், இரத்தம் வெளிவருவது நிற்கவில்லையாயின் அல்லது ஒரு மாதத்திற்கு இரண்டொரு நாட்கள் வெளிவந்து

16. இஜ்திஹாத் : புதிய சந்தர்ப்ப சூழ்நிலைகளைப் பொறுத்து உருவாகும் விடயங்கள் தொடர்பாக, இஸ்லாமிய அறிஞர்கள் எடுக்கும் நியாயமான (இஸ்லாமிய அடிப்படைகளுக்குப் பொருத்தமான) முடிவுகளை இச் சொல் சார்ந்த முடிவுகள் எனக் கொள்ளப்படும்.

நின்றுவிடுமாயின் அப்பொழுது அந் நிலைக்கு ஆளாகும் பெண் இஸ்திஹாதாஹ்* என்ற நிலையில் இருப்பதாகக் கருதப் படுவாள்.

ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (றஹ்) அவர்கள் கூறினார்கள்:

"அடிப்படையில், இஸ்திஹாதாஹ் எனத் தீர்மானிப்பதற்குச் சாதகமான ஆதாரம் எதுவும் கிடைக்காதபட்சத்தில், கருப்பையிலிருந்து வெளிவரும் அனைத்தும் மாதவிடாய் சார்ந்தனவாகும்."

அவர் மேலும் கூறினார்:

"(ஒரு பெண்ணிடமிருந்து) வெளிவரும் இரத்தம் ஒரு காயத்திலிருந்தோ, ஓர் இரத்த நாலத்திலிருந்தோ வெளிவருகின்றது என அறிந்து கொண்டாலன்றி அதனை மாதவிடாய் இரத்தம் என்றே கொள்ள வேண்டும்."

இக்கூற்றுக்கள் ஒரு பலமான கருத்தைக் கொண்டுள்ளன என்பது மட்டுமல்ல, விளங்கி, கருத்தில் கொண்டு, இலகுவாக செயல்படுத்தவும் கூடியதாகவுள்ளன. மேலும், இக்கருத்தை மற்ற எல்லாக் கருத்துக்களையும் விட மேலான நிலையில் வைத்து அங்கீகரிக்கவும் முடியும். ஏனெனில், நிவாரணமிக்க, இலகுவாகப் பின்பற்ற முடிந்த இஸ்லாத்தின் உயிரோட்டத்திற்கும் ஒட்டு மொத்தக் கருத்திற்கும் இது இணக்கமானதாகும்.

அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ هُوَ اجْتَبَاكُمْ وَمَا جَعَلَ عَلَيْكُمْ فِي الدِّينِ مِنْ حَرَجٍ ﴾ [الحج، الآية ٧٨]

***"அவன் (தனது பணிக்காக) உங்களைத் தேர்ந்தெடுத்துள்ளான். மேலும், அவன் தீனில் - வாழ்க்கை நெறியில் உங்களுக்கு எவ்வித சிரமத்தையும் வைத்திடவில்லை."***

(அல் குர்ஆன் 22:78)

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள் :

"நிச்சயமாக, இந்தத் தீன் (வாழ்க்கை நெறி) (பின்பற்றுவதற்கு) மிக இலகுவானது. யாரேனும் தமது தீனைப் பின்பற்றுவதில் தமக்கு அதிகச் சுமையை ஏற்றிக் கொள்கிறாரோ, அவர் அவ்வாறே அதனை தொடர்ந்து பின்பற்ற முடியாது. எனவே, நீங்கள் தீவிரவாதிகளாகி விடாதீர்கள். (மிகச் சரியான) நிறைவானதை அண்மித்து வர முயற்சியுங்கள்; உங்களுக்கு வெகுமதிகளைப் பெற்றுத் தருவதாகக் கூறும் நற்செய்திகளை நாடிப் பெறுங்கள்."[17]

இவ்வாறு நவின்ற நபி (ஸல்) அவர்கள், எப்பொழுதாயினும், ஏதாவது இரண்டு விடயங்களுள் ஒன்றைத் தெரிவு செய்ய வேண்டிய நிலைக்குட்பட்டால், அதுவொரு தவறான விடயமாக இல்லாவிடத்து, மிக இலகுவானதையே தெரிவு செய்வார்கள்.

---

* இது பற்றி பின்னாலுள்ள பக்கங்களில் விவரிக்கப்படும்.

17. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol:1, பக்:34, ஹதீஸ் எண் : 38.

# கருத்தரித்த பெண்ணின் மாதவிடாய்!

அனேகமாக பெண்கள் கருத்தரித்துவிட்டால் அவர்களது மாதவிடாய் நின்றுவிடுகின்றது. இமாம் அஹ்மத்[18](ரஹ்) அவர்கள் கூறினார்கள்: "பெண்களின் மாதவிடாய் நின்றுவிட்டால் அவர்கள் கருத்தரித்துள்ளனர் என அறிந்துகொள்ள முடியும்!" என்று. ஒரு கருவுற்ற பெண் பிரசவத்திற்கு சற்று (இரண்டு மூன்று நாட்களுக்கு) முன்னர் இறுகிப்பிடிக்கும் (பிரசவ) வேதனையுடன் இரத்தம் வெளிவரக் கண்டால் அது 'நிஃபாஸ்' என்றே கருத வேண்டும். சில வேளை, அவள் தனது பிரசவத்திற்கு சில நாட்களுக்கு முன்போ அல்லது பிரசவத்திற்கு சற்று முன்போ எத்தகைய பிரசவ வேதனையுமின்றி இரத்தம் வெளிவரக் கண்டால், அது 'நிஃபாஸ்' அல்ல.

(இறுதியாகக் கூறப்படும் இந்நிலை நிஃபாஸ் அல்ல எனில்) இதனை மாதவிடாய் என கணிக்க முடியுமா? இது தொடர்பாக மாதவிடாய்க்கான எல்லாச் சட்டங்களையும் பிரயோகிக்க முடியுமா? முடியாதா? என்பன போன்ற கேள்விகள் எழக் காணலாம். இது விடயமாக அறிஞர்களிடையே கருத்து முரண்பாடு இருக்கின்றது. எவ்வாறாயினும், இதற்கான மிகச் சரியான கருத்து என்னவெனில் இது மாதவிடாய் இரத்தம் என்பதாகும். இதற்கான காரணம் இது தொடர்பான பொதுவான நெறிமுறையில் தங்கியிருக்கின்றது. அதாவது, ஒரு பெண் தன்னில் காணும் இரத்தம் மாதவிடாய் சார்ந்தது என்ற கணிப்பை மாற்றக் கூடிய காரணிகள் இல்லாத வரையில் அது மாதவிடாய் இரத்தமேயாகும். கர்ப்பிணியான ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் உண்டாகாது எனச் சுட்டிக்காட்டும் எதுவும் அல்லாஹ் அருளிய அல்குர்ஆனிலும் நபி (ஸல்) அவர்களுடைய சுன்னாஹ்விலும் இல்லை.

இதுதான் இமாம் மாலிக்[19](ரஹ்) அவர்களுடையவும் இமாம் சாபிஈ[20](ரஹ்) அவர்களுடையவும்

---

18. இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (கி.பி. 778 - 855) அவர்கள், அவர் வாழ்ந்த காலத்தில் ஹதீஸ்களை மனனமிடுவதிலும், அறிவிப்பதிலும் சிறந்து விளங்கிய ஒருவராவார். அவர்கள் ஹதீஸ்களை சேகரித்தல், அவற்றை அறிவித்தல், அவற்றிற்கு விளக்கமளித்தல் என்பதில் அதிக கவனம் செலுத்தினார்கள். குர்ஆனையும் ஹதீஸையும் விளங்குவதில் ஒருவகையானத் தத்துவப் போக்கு - கொள்கை உருவானபோது, அவர் அதற்கெதிரான போக்கைக் கடைப்பிடித்ததால் பல தொடரான தொல்லைகளுக்கு ஆளாக நேர்ந்தது. அவருடைய சட்ட முறையான சிந்தனைப் போக்கு - குர்ஆன், சுன்னாஹ், ஸஹாபாக்களின் ஏகோபித்த கருத்து என்பவற்றை ஆதாரமாகக் கொண்டவைகளுக்கு அதிக அழுத்தம் கொடுக்கும் வகையில் அமையப் பெற்றதே.

19. இமாம் மாலிக் இப்னு அனஸ் இப்னு ஆமிர்(ரலி) அவர்கள் (கி.பி.717 - 801) மதீனாவில் பிறந்தவர்கள். அவருடைய பாட்டனார் ஆமிர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் சிறப்பான தோழர்களுள் ஒருவராவார்கள். இமாம் மாலிக் அவர்கள் சுமார் நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாக மதீனாவில் ஹதீஸ்கள் கற்றுக் கொடுப்பவராகத் திகழ்ந்தார்கள். அவர் நபி (ஸல்) அவர்களின் ஹதீஸ்கள், ஸஹாபாத் தோழர்களின் கூற்றுக்கள், அவர்களைத் துயர்ந்தோர் கூற்றுக்கள் என்பன அடங்கிய நூலொன்றைத் தொகுத்தளித்தார்; அதன் பெயர் 'அல் முவத்தா' என்பதாகும். இந் நூல் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இந் நூலுக்கு கலங்கம் ஏற்படுத்தும் வகையில் இங்கிலாந்திலுள்ள ஒரு ஸூஃபி இதற்கொரு அறிமுகம் எழுதியுள்ளார். மாயைமிக்க ஸூஃபிஸத்திற்கு இஸ்லாத்துடன் எதுவித உறவும் இல்லை. இந்த ஸூஃபித்துவக் குழுவைச் சார்ந்தோர் 'தமக்கு அல்லாஹ்விடமிருந்து நேரடியாகவே 'கஸ்ஃப்' எனும் அறிவிப்பு' வருவதாக வாதிடுவர்: 'அவர்களால் இப் பிரபஞ்சத்தையே ஆட்டிப் படைக்க முடியும்'; 'அல்லாஹ்வின் ஒருமை என்பதன் பொருள் அவன் அனைத்துப் பொருட்களிலும் வியாபித்து நிற்கின்றான்' என்பதுதான்,' என்றும் வாதிடுவர். நிச்சயமாக, கண்ணியமிக்க அல்லாஹ் அர்ஸில் இருந்து அனைத்தையும் பார்ப்பவன்; அறிபவன்; சூழ்ந்து இருப்பவன். அன்றி, கிறிஸ்தவர்களும் மற்றைய குழுக்களும் வாதிடுவது போல் 'அல்லாஹ் தனது படைப்புக்களில் இரண்டறக் கலந்து நிற்கின்றான்!' என்பதில்லை. அல்லாஹ்வின் பண்புகள் யாவுமே தனித்தன்மையுடையன: பரிபூரணத்துவமுடையன; அவனுடைய படைப்புக்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டனவாகும்.

﴿ ليس كمثله شيء وهو السميع البصير ﴾ (الشورى، الآية ١١)

*"(உலகத்தின்) எந்தப் பொருளும் அவனுக்கு ஒப்பானதாய் இல்லை; அவன் அனைத்தையும் செவியுறுபவனும் பார்ப்பவனும் ஆவான்.*

(அல் குர்ஆன் 42:11)

20. இமாம் முஹம்மத் இப்னு இத்ரீஸ் அஸ்ஸாஃபிஈ (ரஹ்) (கி.பி. 769 - 820) அவர்கள் காஸ்ஸாவில் பிறந்து, தனது இளவயதில் இமாம் மாலிக் (ரஹ்) அவர்களிடம் மார்க்கக் கல்வி பெற மதீனாவுக்குச் சென்றார்கள். இமாம் அபூஹனீபா (ரஹ்) அவர்களின் பிரபலமிக்க

கருத்தாகும்; இதுவே சைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (ரஹ்)அவர்களது தெரிவாகும்; இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்களும் இதனையே ஏற்றுக் கொண்டுள்ளார்கள்.

எனவே, கீழ்க்காணும் இரு நிலைகளிலன்றி, கருவுற்ற ஒரு பெண்ணின் மாதவிடாய்க்கு, சாதாரண (ஒரு பெண்ணின்) மாதவிடாய்க்கும் பொருந்தும் எல்லாச் சட்டங்களும் பொருந்துவனவாய் அமையும்.

அ) விவாகரத்து : கருவுறாத ஒரு பெண்ணை அவளது இத்தா [21]வின் போதுதான் விவாகரத்து செய்ய வேண்டுமே (அவளது கணவன் அவளுடன் உடலுறவு கொள்வது, அவள் கருவுற்று இருப்பது போன்றவற்றிலிருந்து தூய்மையாகி இருந்தாலே) தவிர அவள் மாதவிடாய் உண்டாகி இருக்கும் போது விவாகரத்து செய்வது கூடாது என்பது நாம் அறிந்ததே. இஸ்லாத்தின்படி அது சட்ட முரணானதாகும்.

அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ إذا طَلَّقْتُمُ النِّسَاءَ فَطَلِّقُوهُنَّ لِعِدَّتِهِنَّ ﴾[ الطلاق، الآية ١ ]

***"நீங்கள் பெண்களை விவாகரத்து செய்வீர்களாயின் அவர்களின் இத்தா (காலத்தை நிர்ணயிக்க) வசதியாக விவாகரத்து செய்யுங்கள்."***

(அல் குர்ஆன் 65:1)

கருவுற்ற ஒரு பெண்ணின் இத்தா காலம் அவள் கருவுற்றுள்ள காலம் முழுவதுமாகும்: அப்பொழுது அவளுக்கு மாதவிடாய் இருந்தாலும், இல்லாவிட்டாலும் சரியே இதில் மாற்றமில்லை. எனவே, அவளது விவாகரத்து அந்த கருவுற்றுள்ள காலத்தின் முடிவினை சாா்ந்து நிற்கின்றது. இதில் அவளது மாதவிடாய்க்கு எதுவித சம்பந்தமும் இல்லை.

ஆ) அல்லாஹ்வின் கூற்றுக்கேற்ப கருவுற்ற பெண்ணின் இத்தா அவளுடைய பிரசவத்துடன் முடிவடைகின்றது. அக்கால எல்லையில் அவளுக்கு மாதவிடாய் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இதுவே சட்டமாகும்.
அல்லாஹ் கூறுவது இதுதான்.

﴿ وأولاتِ الأحمالِ أجَلُهُنَّ أن يَضَعْنَ حَمْلَهُنَّ ﴾ [ الطلاق ، الآية ٤ ]

***"மேலும், கா்ப்பிணிகளுக்கான இத்தா வரம்பு அவர்கள் குழந்தை பெற்றெடுப்பதுடன் முடிகின்றது."***

(அல் குர்ஆன் 65:4)

---

*மாணவரான ஈராக்கைச் சேர்ந்த இமாம் முஹம்மத் இப்னு அல் ஹஸன் அவர்களிடமும் கல்வி கற்றவர். இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்கள் இஸ்லாமிய ஃபிக்ஹ் சட்டங்களின் அடிப்படை அம்சங்களை சீரமைத்து ஒழுங்குபடுத்துவதில் ஈடுபாடு கொண்ட முதல் இமாம் என்ற சிறப்பைப் பெற்றுத் திகழ்கின்றார்.*

21. இத்தா (குறித்துத் தரப்பட்ட காலம்): இத்தாவுக்குரிய வரைவிலக்கணத்தை ஒரு ஹதீஸின் மூலம் பெற்றுக்கொள்ள முடிகின்றது.
அந்த ஹதீஸ் வருமாறு :
'நபி (ஸல்) அவர்கள் வாழ்ந்து வந்த வேளையில், அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், மாதவிடாய் உண்டாகி இருந்த தனது மனைவியை விவாகரத்து செய்துவிட்டதாக அறிவிக்கின்றார். உமர் இப்னு கத்தாப் (ரலி) அவர்கள் இது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கூறுகின்றார். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், "அவருக்கு (உங்கள் மகனுக்கு)க் கட்டளையிடுங்கள்: அவளைத் திரும்ப எடுத்து, அவள் சுத்தமாகும் வரை வைத்திருக்க வேண்டும்.பின்னர் அடுத்த மாதவிடாய் உண்டாகி சுத்தமாகும்வரை காத்திருக்கும்படி கூறுங்கள். அதன் பின்னர், அவர் அவளைத் தன்னுடன் வைத்துக்கொள்ள விரும்பினால், அவ்வாறு செய்து கொள்ளலாம். சிலவேளை அவர் அவளை விவாகரத்து செய்ய விரும்பினால் அவளுடன் உடலுறவு கொள்வதற்கு முன்னர் விவாகரத்து செய்யலாம். இதுதான் ஒரு பெண்ணை விவாகரத்து செய்வதற்கு அல்லாஹ் விதித்துள்ள கால வரையறையாகும்."
ஸஹீஹ் புகாரி (ஆங்கிலம் - அரபி) Vol: 7, பக்: 129, ஹதீஸ் எண்: 178.

# 3

# மாதவிடாயிலான மாற்றங்கள்!

மாதவிடாயில் அவ்வப்போது பல்வேறு மாற்றங்கள் ஏற்படுவதை அவதானிக்க முடியும்.

முதலாவது : கூடுதல் அல்லது குறைதல். உதாரணமாக : சாதாரணமாக ஆறு நாட்கள் வரை இருக்கும் கால எல்லை ஏழாவது நாள் வரை நீடித்தல். அல்லது ஏழு நாட்கள் வரை நீடிக்க வேண்டிய கால எல்லை ஆறாவது நாளுடன் முடிவடைதல்.

இரண்டாவது : குறித்த காலத்திற்கு முன்னே வருதல் அல்லது தாமதித்து வருதல். உதாரணமாக : வழமையாக ஒரு பெண் தனது மாதவிடாயை ஒவ்வொரு மாத இறுதியிலும் வரப் பெறுகின்றாள். ஆனால் பின்னர் மாதத்தின் ஆரம்பத்தில் அல்லது அதற்கு நேரெதிராக அது நடைபெறக் காண்கின்றாள். இந்த இரண்டு நிலை தொடர்பான இறை மார்க்கத்தின் முடிவு என்ன என்பதில் அறிஞர்கள் கருத்து முரண்படுகின்றனர். இது பற்றிய மிகவும் சரியான நிலைப்பாடு என்னவெனில், அவள் எப்பொழுது இரத்தத்தைக் காண்கின்றாளோ அப்பொழுது அதை மாதவிடாய் எனக்கருத வேண்டும்; எப்பொழுது இரத்தம் நின்று சுத்தமடைகின்றாளோ அப்பொழுது அவள் தூய்மை அடைந்து விட்டதாகக் கருத வேண்டும். இதில் கூடுதல் அல்லது குறைதல் என்றோ, குறித்த காலத்திற்கு முன்னே வருதல் அல்லது தாமதித்து வருதல் என்றோ மனதை அலட்டிக்கொள்ள வேண்டியது இல்லை. ஏனெனில் முன்னர் விளக்கியது போன்று மாதவிடாய் பற்றிய சட்டங்கள், உண்மையான மாதவிடாய் தொடர்பான இரத்தம் இருப்பதைச் சார்ந்து நிற்கின்றன.

மூன்றாவது : (சற்று மஞ்சல் நிறமுடைய சீழ் போன்றுள்ள) சாடையான மஞ்சல் நிறமுடைய அல்லது 'குத்ராஹ்' எனும் சாடையான மஞ்சல் கறுப்பு நிறங்களுக்கு இடையிலான ஏதும் வெளிப்படுதல். மாதவிடாய் காலத்தின் போது இவ்வாறு ஏதும் வெளிப்படுமானால் அல்லது அதற்கு அடுத்தாற் போன்று - தஹாரா (சுத்தம்) உடைய நிலையை அடைவதற்கு முன்போ இது நிகழுமானால், இதை மாதவிடாய் என்றே கருத வேண்டும். அத்துடன் மாதவிடாய் தொடர்பான அனைத்து சட்டங்களும் இதற்குப் பொருந்துவதை நோக்க வேண்டும்.

சிலவேளை, இத்தகைய ஏதும் வெளிப்படுதல் தஹாராவை (சுத்தத்தை) அடைந்ததன் பின் நிகழுமாயின், அந்நிலையை மாதவிடாய் எனக் கருதக் கூடாது என்பது உம்மு அதிய்யாஹ் (ரலி) அவர்களது கருத்திலிருந்து யூகிக்க முடிகின்றது. அவர்கள் கூறினார்கள் : "(சுத்தம் அடைந்ததன் பின்பு) சற்று மஞ்சள் நிறத்தில் வெளிப்படும் எதனையும் மாதவிடாயைப் போன்று (முக்கியத்துவம் கொடுத்து) நாம் கருதவில்லை."[22] "சுத்தம் அடைந்ததன் பின்பு" என்ற இந்த சொற்களின்றி இதே விடயம் புகாரி[23] ஹதீஸ் கிரந்தத்தில் அறிவிக்கப்பட்டுள்ளது. எனினும், இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸை 'மாதவிடாய் காலத்திற்கு இடையிலான தினங்களில் வெளிப்படும் சற்று மஞ்சள் நிறமுடையவை' என்ற தலைப்பிலான அத்தியாயத்தின்

---

22. சிறப்பான அறிவிப்பாளர்களைக் கொண்டு இமாம் அபூதாவுத் இதை அறிவிக்கின்றார்.

23. ஸஹீஹுல் புகாரி (அரபு–ஆங்கிலம்) Vol: 1, பக்: 194, ஹதீஸ் எண் : 323.

கீழ்க் கொண்டு வந்துள்ளார்கள்.

இதனை அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்த மற்றொரு ஹதீஸ் மூலம் தெளிவுக்குக் கொண்டு வருகிறார் இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் :

"சில பெண்கள் (தாம் மாதவிடாயிலிருந்து சுத்தம் அடைந்துவிட்டோமா இல்லையா என்பதை அறிந்து கொள்ளவென) சற்று மஞ்சள் நிறத்தில் வெளிப்பட்டது பட்டுவிட்ட அடையாளம் உள்ள தமது பருத்தி வைப்பு (Pad) களை ஆயிஷா (ரலி) அவர்களுக்கு அனுப்பி வைப்பார்கள். (அப்பொழுது) ஆயிஷா (ரலி) அவர்கள் சொல்வார்கள்: "நீங்கள் 'அல் கஸ்ஸத்தல் (B)பைதாவை (கருப்பையிலிருந்து வெள்ளை வருவது; பருத்தி வைப்பு (Pad) வெள்ளையாயிருத்தல்) காணும் வரை அவசரப்படாதீர்கள். அதாவது மாதவிடாய் முற்றாக நீங்கும் வரை என்பது இதன் கருத்தாகும்."[24]

நான்காவது : மாதவிடாயில் தொடரின்மை; ஒழுங்கின்மை. அதாவது, ஒருநாள் இரத்தம் வெளிவரும்; ஆனால், மறுநாள் அது நின்றுவிடும். இது தொடர்பாக இரண்டு விதத் தன்மைகள் இருக்கின்றன.

1. இத்தகைய தொடரின்மை எல்லா நேரங்(நாட்)களிலும் இடம் பெறுமாயின், அப்போது வெளிவரும் இரத்தம் இஸ்திஹாதாஹ் என்றே கருதப்பட வேண்டும். இஸ்திஹாதாஹ்வுக்குரிய எல்லா சட்டங்களும் இதற்கு ஏற்புடையதாகும்.
2. இத் தொடரின்மை சிற்சில நேரங்(நாட்)களில் இடம் பெறுவதுடன் சுத்தமாக இருக்கும் காலமும் இருக்கின்றது. இந்த சுத்தமாக இருக்கும் காலம் பற்றி அறிஞர்கள் கருத்து முரண்படுகின்றனர். அதாவது, அது உண்மையிலேயே மாதவிடாய்க்கான சட்டங்கள் பொருந்தாத சுத்தமுடைய காலமா? அல்லது அது மாதவிடாய்க் காலத்தின் ஒரு பகுதியா? என்பதே கருத்து முரண்பாட்டிற்கான விடயமாகும்.

இமாம் ஷாஃபிஈ (ரஹ்), சைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (ரஹ்), இமாம் அபூ ஹனிஃபா (ரஹ்) அவர்களின் மத்ஹபின் கருத்துக்களின்படி இது மாதவிடாயின் ஒரு பகுதியாகும். ஏனெனில், 'காஸ்ஸாஹ் அல் (B)பைதா' அங்கு காணப்படவில்லை. இந்நிலையில் அதை தூய்மையானதாகக் கருத முற்பட்டால் அது பெண்களுக்குப் பெரும் கஷ்டத்தையும் துன்பத்தையும் தருவதாகவே அமையும். நிச்சயமாக இது இஸ்லாமியக் கோட்பாடுகளின் சாராம்சத்திற்கு முரணானதாகும்.

மறு புறத்தில், ஹன்பலி மத்ஹபின் மிகப் பிரபலமான கருத்து என்னவெனில்: இரத்தம் வெளிவந்தால் அது மாதவிடாயாகும்; சுத்தம் அடைந்தால் அது தஹாராவாகும் (தூய்மையாகும்). எனினும், மாதவிடாய் காலமும் தூய்மையுடைய காலமும் இணைந்து 'மாதவிடாயின் மிக நீண்ட காலத்தை' (இந்த மத்ஹபின்படி பதினைந்து நாட்களைக்) கடந்து விடுமாயின், அப்பொழுது அதை 'இஸ்திஹாதாஹ்' எனக் கருத வேண்டும். (ஹம்பலி மத்ஹபின் ஃபிக்ஹ் நூலான) அல் முஃக்னியின் ஆசிரியர் இவ்வாறு கூறுகின்றார்: "ஒரு நாளை விடவும் குறைவாக இரத்தம் நிற்குமாயின் அவள் தெளிவான ஆதாரத்தைக் கண்டாலன்றி அதைத் 'தஹாரா' (சுத்தம்) உடைய நிலை எனக் கருத முடியாது. உதாரணமாக அவளது மாதவிடாயின் இறுதியில் (இரத்தம்)

---

24. மேற்படி, Vol. 1, பக்: 190.

வெளிவருதல் நின்றுவிடுகின்றது. அல்லது 'காஸ்ஸாஹ் அல் (B)பஈதா'வை அவள் காண்கின்றாள்."[25]

இந்நூலின் ஆசிரியர், "முஃக்னி'யின் இக்கூற்று, மேற்காணும் இரண்டு கருத்துக்களுக்கும் இடையிலான மத்திமமான நிலையாகும். அல்லாஹ் மிக சிறப்பானதை அறிந்தவன்!" எனக் கூறுகின்றார்.

ஐந்தாவது : இரத்தத்திலான வரண்ட தன்மை: ஒரு பெண் ஈரமான ஏதும் வெளியேறக் காண்கின்றாள். இது மாதவிடாயின் போது நிகழுமாயின் அல்லது சுத்தம் அடையுமுன் அதனுடன் தொடர்புற்று இருக்குமாயின், அப்பொழுது அது மாதவிடாயாகும். ஆனால், சுத்தம் ஆகிய பின்னர் அது நிகழுமாயின், அப்பொழுது அது மாதவிடாய் அல்ல.



25. அல் முஃக்னீ, Vol: 1, பக்: 355.

4

# மாதவிடாய் சம்பந்தமான சட்டங்கள்!

மாதவிடாய் சம்பந்தமாக ஏராளமான சட்டங்கள் இருக்கின்றன. இங்கு மிக அவசியமானவற்றை மட்டும் எடுத்துக் கூறுவது போதுமானது எனக் கருதுகின்றோம்.

## 1 – அஸ்ஸலாத் (தொழுகை)

பெண்களுக்கு மாதவிடாய் உண்டாகி இருக்கும்போது பர்ளான சுன்னத்தான எந்தத் தொழுகையும் தொழுவது தடை செய்யப்பட்டுள்ளது. குறிப்பிட்ட ஒரு தொழுகைக்குரிய நேரத்தில், அத்தொழுகையின் பூரணமான ஒரு ரக்அத்தைப் பெற்றுக்கொள்ள முடிந்தாலன்றி, அத்தொழுகையை நிறைவேற்றும் கட்டாயமோ கடமையோ ஒரு பெண்ணுக்கு இல்லை. இதை இன்னும் விரிவாகக் காண்பதற்கு கீழ்க் காணும் உதாரணங்களை நோக்குங்கள்.

*முதலாவது உதாரணம்* : ஒரு பெண்ணுக்கு சூரியன் மறைந்த பின்னர் மாதவிடாய் உண்டாகின்றது. அவ்வேளையில் மஃரிப் தொழுகையின் ஒரு ரக்அத்தைப் பெற்றுக் கொள்ளும் அளவு காலம் அவள் சுத்தமாக இருந்துள்ளாள். இதன் காரணமாக, அவள் பூரணச் சுத்தம் அடைந்தபின் அந்த மஃரிப் தொழுகையை பூரணமாக நிறைவேற்ற வேண்டும்.

*இரண்டாவது உதாரணம்* : ஒரு பெண்ணுக்கு சூரியன் உதயமாகுமுன்னர் மாதவிடாய் நின்று விடுகின்றது. அவ்வேளையில் ஃபஜ்ர் தொழுகையின் ஒரு ரக்அத் மாத்திரம் தொழுவதற்குரிய காலம் உண்டு. எனவே, அவள் தன்னைப் பூரணமாகச் சுத்தப்படுத்திக் கொண்ட பின்னர் ஃபஜ்ர் தொழுகையைப் பூரணமாக நிறைவேற்ற வேண்டும்.

இந்த இரண்டு உதாரணங்களிலும் காணப்படும் யதார்த்தம் என்னவெனில், அவளுக்கு தொழுகையின் ஒரு ரக்அத்தை நிறைவேற்றுவதற்குக்கூட காலம் போதவில்லை என்றால், அவள் மீது அத் தொழுகையை நிறைவேற்றும் கட்டாயம் இல்லை என்பதாகும்.

நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்:

“ஒரு தொழுகையின் ஒரு ரக்அத்தை (அத்தொழுகைக்குரிய சரியான நேரத்தில்) எவர் பெற்றுக் கொள்கின்றாரோ அவர் தொழுகையைப் பெற்றுக் கொண்டவர் ஆவார்.”[26] இந்த ஹதீஸ், ஒரு தொழுகையின் ஒரு ரக்அத்தை அதற்குரிய சரியான நேரத்தில் எவர் பெற்றுக் கொள்ளவில்லையோ அவர் தொழுகையைப் பெற்றுக்கொள்ளவில்லை என்பதற்குப் பொருந்துகின்றது.

---

26. ஸஹீஹுல் புகாரி (அரபு-ஆங்கிலம்) Vol: 1, பக்: 322, ஹதீஸ் எண் :554.

## ஓர் அணுகல் :

சிலவேளை, ஒரு பெண் அஷர் தொழுகையின் ஒரு ரக்அத்தை அத்தொழுகைக்குரிய சரியான நேரத்தில் பெற்றுக் கொள்ள முடிகின்றது. அப்பொழுது அவள் லுஹர் தொழுகையை அஷர் தொழுகையுடன் தொழும் கட்டாயத்திற்கு உட்படுகின்றாளா? அல்லது ஒரு பெண் இஷா தொழுகையின் ஒரு ரக்அத்தை அத் தொழுகைக்குரிய சரியான நேரத்தில் பெற்றுக் கொள்ள முடிந்தால், அப்பொழுது அவள் மஃரிப் தொழுகையை இஷா தொழுகையுடன் தொழும் கட்டாயத்திற்கு உட்படுகின்றாளா?

இந்த விடயங்கள் தொடர்பாக அறிஞர்கள் மத்தியில் சர்ச்சை இருக்கின்றது. இது தொடர்பான சரியான நிலைப்பாடு என்னவெனில், அவள் எந்தக் குறிப்பிட்டத் தொழுகையைப் பெற்றுக்கொள்ள முடிந்ததோ அதை மட்டும் நிறைவேற்ற வேண்டும். உதாரணமாக: அஸர் தொழுகையையும் இஷா தொழுகையையும் மட்டும் நிறைவேற்ற வேண்டும். இது நபி (ஸல்) அவர்களது ஹதீஸ் ஒன்றை அடித்தளமாகக் கொண்டுள்ள கருத்தாகும்.

அவர்கள் மொழிந்தார்கள்:

"சூரியன் மறைவதற்கு முன்னர் அஷர் தொழுகையின் ஒரு ரக்அத்தை எவர் பெற்றுக் கொள்கின்றாரோ, அப்பொழுது அவர் அஷர் தொழுகையைப் பெற்றவர் ஆவார். (இருவரும் ஒப்பியது)"[27] மாறாக, "அப்பொழுது அவர்/அவள் லுஹர் தொழுகையையும் அஷர் தொழுகையையும் பெற்றுக் கொண்டார்!" என நபி (ஸல்) அவர்கள் மொழியவில்லை. மேலும் லுஹர் தொழுகையை நிறைவேற்றுவது கடமை என்றும் அவர்கள் மொழியவில்லை. இது இமாம் மாலிக் (ரஹ்), இமாம் அபூஹனிஃபா (ரஹ்) ஆகியவர்களது மத்ஹப்கள் கொண்ட நிலைப்பாடாகும்.

## மற்றோர் அணுகல் :

ஒரு பெண் மாதவிடாயின்போது (தக்பீர், தஸ்பீஹ், தஹ்மீத்[28] என்பன மொழிந்து) அல்லாஹ்வைப் புகழ்வதோ, (உண்ணல், பருகல், போன்ற) செயல்களை ஆரம்பிக்கும் பொழுது 'பிஸ்மில்லாஹ்' மொழிவதோ, ஹதீஸ்கள் படிப்பது, இஸ்லாமிய கலந்துரையாடல்களில் ஈடுபடுவது, அல்லாஹ்விடம் பிரார்த்தனை புரிவது, குர்ஆன் ஓதக் கேட்பது போன்றவற்றைச் செய்வதோ இஸ்லாமிய நெறிமுறைகளுக்கு முரணானவையல்ல. அன்னை ஆயிஷா (ரலி) அவர்களது ஒரு கூற்று இதற்காதாரமாகின்றது. அவர்கள் கூறினார்கள் . "நான் மாதவிடாய் உண்டாகியிருந்த போது நபி (ஸல்) அவர்கள் என் மடியில் சாய்ந்திருந்து குர்ஆன் ஓதினார்கள்."[29]

(புஹாரி, முஸ்லிம்)

---

27. ஸஹீஹ் முஸ்லிம் (ஆங்கிலம் - அப்துல் ஹமீத் ஸித்தீக்கி மொழிபெயர்ப்பு, தாருல் அரபி, பெய்ரூத், லெபனான் வெளியீடு), Vol: 1, பக்: 298, ஹதீஸ் எண்: 1266.

28. தக்பீர் : அல்லாஹு அக்பர் (அல்லாஹ்வே மிகப் பெரியவன்) என மொழிவது:
தஸ்பீஹ் : சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் மிகுந்த கண்ணியமிக்கவன்) என மொழிவது:
தஹ்மீத் : அல்ஹம்துலில்லாஹ் (புகழ் எல்லாம் அல்லாஹ்வுக்கே) என மொழிவது.

29. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol: 1, பக்: 179, ஹதீஸ் எண்: 296.

நபி (ஸல்) அவர்கள் நவின்றிடக் கேட்டதாக உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் அறிவிப்பதாவது:

"எப்பொழுதும்போல் திரைக்குப் பின்னால் இருக்கும் மணமாகாத இளம் கன்னிகளும், நன்கு வளர்ந்த பெண்பிள்ளைகளும் அல்லது எப்பொழுதும்போல் திரைக்குப் பின்னால் இருக்கும் மணமாகாத இளம் கன்னிகளும், மாதவிடாய் உண்டான பெண்களும் வெளியே வந்து நற்காரியங்களில் பங்கெடுக்க வேண்டும்; அத்துடன் உண்மையான விசுவாசிகளின் மார்க்கக் கூட்டங்களில் கலந்துகொள்ள வேண்டும். ஆனால், மாதவிடாய் உண்டான பெண்கள் முஸல்லாவை (தொழும் இடத்தை) விட்டு ஒதுங்கி இருக்க வேண்டும்."[30]

## இன்னுமோர் அணுகல் :

மாதவிடாய் உண்டான ஒரு பெண் தனது நாவால் உண்மையான சொல் வடிவில் ஓதாது நேரடியாகப் பார்த்தோ அல்லது (அவளது மனதால்) அமைதியாகவோ குர்ஆனை ஓதுவதற்கு அனுமதி உண்டு. அறிஞர்களுள் பெரும்பாலானோர் அவள் குர்ஆனை சப்தமிட்டு ஓதுவது தடை செய்யப் படவில்லை என்ற கருத்தைக் கொண்டுள்ளனர். இமாம் புகாரி (ரஹ்), இப்னு ஜரீர் அத்தபரீ (ரஹ்), இப்னு அல் முந்திர் (ரஹ்), இமாம் மாலிக் (ரஹ்), இமாம் ஷாபிஈ (ரஹ்) (இவர் தனது முக்கிய கூற்றொன்றில்) ஆகியவர்கள், 'அவள் ஆயத்து (குர்ஆனிய வசனங்)கள் ஓதுவது அனுமதிக்கப்பட்டது' என்ற கருத்தைக் கொண்டுள்ளார்கள்.

சைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் கூறினார்கள். "அடிப்படையில் அவள் குர்ஆன் ஓதுவதை தடுக்கக்கூடிய சுன்னாஹ் எதுவும் இல்லை!" என்று, "மாதவிடாய் உண்டான ஒரு பெண்ணும், ஜனாபத்[31]துடன் இருக்கும் ஒருவரும் குர்ஆனிலுள்ள எதுவும் ஓதக்கூடாது." என்ற ஹதீஸ் பலயீனமானது. ஹதீஸ் கலை பற்றிய ஆழ்ந்த பாண்டித்தியம் உள்ளவர்கள் இதில் ஒருமித்த கருத்தைக் கொண்டுள்ளார்கள்.

உண்மையில், நபி (ஸல்) அவர்கள் காலத்து பெண்களுக்கும் மாதவிடாய் இருக்கவே செய்தது. (தொழுகை சம்பந்தமாக அவர்களுக்கு இடப்பட்ட கட்டளை போல) அவர்கள் குர்ஆன் ஓதுவது தடை செய்யப்பட்டிருந்தால், நபி (ஸல்) அவர்கள் தமது சமூகத்திற்கு அதை நன்கு தெளிவுபடுத்தியிருப்பார்கள். அவர்களது தூய மனைவியர் இதை அறிந்துவைத்து, மக்களுக்கு அறிவித்திருப்பார்கள். மேலும், நபி (ஸல்) அவர்கள் இதனைதடை செய்ததாக எவரும் அறிவிக்காத நிலையில், அன்றும் பெண்களுக்கு மாதவிடாய் இருந்த போது நபி (ஸல்) அவர்கள் இதைத் தடை செய்யாத நிலையில், இப்பொழுது தடை செய்வது சாத்தியமில்லை. எனவே, குர்ஆனை நாவினால் ஓதுவது ஹராம் (தடை செய்யப்பட்டது) அல்ல.[32]

---

30. இருவரும் ஒப்பியது. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol: 1, பக்: 192, ஹதீஸ் எண்: 321.

31. ஜனாபத் : ஆணோ பெண்ணோ உடலுறவு கொள்வதன் மூலம் அல்லது கனவு மூலம் விந்து வெளியான நிலையை இது குறிக்கும். இவ் வேளையில் கட்டாயக் குளிப்பை மேற்கொள்ளாமல் தொழுவதற்கோ மற்றும் வணக்கங்கள் தொடர்பான கடமைகள் செய்வதற்கோ முடியாது. தண்ணீரைக் கொண்டு எதுவும் செய்ய முடியாத நிலை இருந்தால் அப்பொழுது தயம்மம் செய்து கொண்டு வணக்க வழிபாடுகளைச் செய்யலாம்.

32. இமாம் இப்னு தைமிய்யாவின் அல் ஃபதாவா: Vol: 26, பக்: 191.

இந்நூலாசிரியர் கூறுகிறார் :

"இந்த விடயம் (மாதவிடாய் காலத்தில் பெண்கள் குர்ஆன் ஓதுவது) தொடர்பாக அறிஞர்கள் மத்தியில் சர்ச்சை இருப்பதால் மாதவிடாய் உண்டான ஒரு பெண், ஆசிரியையாகவோ, ஒரு பரீட்சைக்குத் தமது பாடங்களைத் தயார் பண்ணுபவளாகவோ இருக்கும் நிலை போன்ற தவிர்க்க முடியாத நிலைகளில் அன்றி, மற்றைய நிலைகளில் - வேளைகளில் குர்ஆனைத் தனது நாவினால் ஓதாமல் இருப்பதே மிகவும் நல்லது."

## 2 – அஸ்ஸவ்ம் (நோன்பு நோற்றல்)

மாதவிடாய் உண்டான ஒரு பெண் பர்லானதோ சுன்னத்தானதோ, எந்த வகையான நோன்பும் நோற்பது அனுமதிக்கப் படவில்லை. ஆனால், விடுபட்ட நாட்களின் கட்டாய(பர்ல்) நோன்புகளை நோற்பது கடமையாகும். அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள், 'நாம் இதனை(மாதவிடாய் காலத்தை)க் கடந்தோம். அப்பொழுது நாம் எமது நோன்புகளைப் பூர்த்தி(ஈடு) செய்யும்படி பணிக்கப் பட்டோம். ஆனால், நாம் தொழுகையைப் பூர்த்தி செய்ய வேண்டும் எனப் பணிக்கப்படவில்லை.'[33] எனக் கூறினார்கள்.

ஒரு பெண் நோன்பு நோற்றிருக்கும்பொழுது மாதவிடாய் உண்டானால் அவளது நோன்பு செல்லாததாகி விடும், அது சூரியன் மறைவதற்கு நொடிப்பொழுது முன்னால் நிகழ்ந்தாலும் சரியே. இது அவளுக்கு நோன்பு கட்டாயமாக்கப்பட்ட நாளாயின், அவள் சுத்தமானபின் அந்த நோன்பை மீண்டும் நோற்றாக - ஈடுசெய்தாக - வேண்டும். சிலவேளை, ஒரு பெண் நோன்பு நோற்றிருக்கும்பொழுது மாதவிடாய் உண்டாகலாம் என உணர்கிறாள்; ஆனால், சூரியன் மறைந்த பின்னர் வரை இரத்தம் வெளிவரவில்லை; இந்நிலையில், இது தொடர்பான மிகச் சரியான கருத்துக்களின்படி அவளது நோன்பு பூர்த்தியாகின்றதே தவிர செல்லாததாகி விடுவதில்லை. ஏனெனில், பெண்ணின் உடலினுள்ளே உள்ள இரத்தம் தொடர்பாக சட்டங்கள் எதுவும் இல்லை.

"ஒரு பெண்ணுக்கு கனவில் ஸ்கலிதமானால் குளிப்பது கடமையா?" என நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள் : "ஆமாம், அவள் ஏதும் வெளியேறியிருக்கக் கண்டால்!"[34] என பதில் அளித்தார்கள். இதிலிருந்து, நபி (ஸல்) அவர்கள் ஏதும் வெளிவருவதை நிதர்சனமாகக் காண்பதை வைத்து சட்டம் வகுத்துள்ளார்களே தவிர அதன் (உள்ளேயிருந்து வெளியே) மாறுவதை வைத்து சட்டம் வகுக்கவில்லை என்பது தெளிவாகின்றது. அதேபோன்று, மாதவிடாயைப் பொறுத்த வரையிலும்கூட ஏதும் வெளியாவதை நிதர்சனமாகக் காண்பதைப் பொறுத்து அதற்குரிய சட்டம் அமுலுக்கு வருகின்றது.

**ஒன்று** : ஒரு பெண்ணின் மாதவிடாய் காலம் சூரிய உதயத்தின் (ஃபஜ்ரின்) பின்னரும் தொடருமாயின், அப்பொழுது அவளது அன்றைய நோன்பு அங்கீகரிக்கப்பட மாட்டாது. சூரியன் உதயமாகி ஒரு நொடிப்பொழுதில் அவள் சுத்தமாகி விட்டாலும் சரியே.

---

33. இதற்கான விடயம் சஹீஹ் முஸ்லிம், Vol:1, பக்: 191 லிருந்து எடுக்கப்பட்டது.

34. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol: 1, பக்: 171 - 2.

இரண்டு : அவள் ஃபஜ்ருக்கு முன் சுத்தமாகி நோன்பும் நோற்றால், ஃபஜ்ர் பிந்தியும் பர்லான, கட்டாயக் குளிப்பைக் குளிக்காவிட்டாலும் அவளுடைய நோன்பு ஏற்கத் தக்கதாகும். ஜனாபத்துடைய ஒருவரின் நிலைமையை ஒத்ததே இந்த நிலைமையுமாகும். ஒருவர் நோன்பு நோற்க எண்ணி ஃபஜ்ருக்குப் பின்னரும் அவர்/அவள் கட்டாயக் குளிப்பைக் குளிக்காவிட்டாலும் கூட அவரது/அவளது அன்றைய தின நோன்பு ஏற்கத்தக்கதாகிவிடும். இது கீழ்க்காணும் ஹதீஸுடன் இணக்கமானதே.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் :

"நபி (ஸல்) அவர்கள் ஜனாபத்துடைய நிலையில் (அவர் தனது மனைவியருடன் உடலுறவு கொண்ட பின்) எழுந்து ரமளான் மாதத்தில் நோன்பு நோற்றார்கள்."[35]

## 3 – தவாஃப் (கஃபாவை வலம் வருதல்)

மாதவிடாய் உண்டான பெண்கள் (கட்டாயமான ஃ கட்டாயமில்லாத) எத்தகைய தவாஃபும் (கஃ பாவை வலம் வருதல்) செய்வது தடை செய்யப் பட்டுள்ளது. அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் ஹஜ்ஜின் போது மாதவிடாய் உண்டாகி இருந்தார்கள். அப்பொழுது அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறினார்கள்:

"(ஹஜ்ஜின் போது) ஒரு யாத்ரீகர் செய்ய வேண்டிய எல்லாவற்றையும் செய்யுங்கள். ஆனால், கஃபாவை வலம் வருவதை (தவாஃப் செய்வதை) மாத்திரம் நீங்கள் (மாதவிடாயிலிருந்து) சுத்தமாகும் வரை செய்யாதீர்கள்."[36] இது தவிர்ந்த ஹஜ்ஜுடன் தொடர்பான ஏனைய கடமைகளைச் செய்வது அனுமதிக்கப்பட்டுள்ளது. எனவே, ஒரு பெண் தவாஃப் அல்லது ஸஈ (ஸஃபா மர்வா மலைகளுக்கிடையில் நடத்தல்) செய்து முடியும் தருணத்தில் அவளுக்கு மாதவிடாய் உண்டானால்கூட அவளது செய்துமுடிந்த இக்கடமைகளுக்கு எந்தப் பங்கமும் வந்து விடாது.

## 4 – பிரியாவிடை தவாஃபிலிருந்து விதிவிலக்களித்தல்

ஒரு பெண் ஹஜ் உம்ரா ஆகியவை சார்ந்த கிரியைகள் யாவற்றையும் நிறைவேற்றிவிட்டு வீட்டுக்கு (நாடு அல்லது நகரத்திற்கு)ப் போகுமுன் மாதவிடாய் உண்டாகி விடுகின்றது. இந்த மாதவிடாய் அவளது பயணத்தின் இறுதி வரை நீடிக்குமாயின், அவள் பிரியாவிடை தவாஃபை நிறைவேற்றாமலேயே சென்றுவிட முடியும். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸ் ஒன்று இதற்காதாரமாகின்றது.

அவர்கள் கூறினார்கள்:

---

35. அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: "ரமளானில் கனவில் ஸ்கலிதமாகியதால் அன்றி (உடலுறவு கொண்டதால்) நபி (ஸல்) அவர்கள் ஜனாபத்துடன் இருந்த போது பொழுது விடிந்து விட்டது. அவர்கள் தன்னைக் கழுவிக் கொண்டு நோன்பு நோற்றார்கள்."

(சஹீஹ் முஸ்லிம், Vol: 2, பக்: 539)

36. மேற்படி, அடிக் குறிப்பு 9.

“மாதவிடாய் உண்டான பெண்களைத் தவிரவுள்ள மக்கள் (மக்காவை விட்டு) வெளியேருவதற்கு முன்னுள்ள கடைசி கிரியையாக தவா∴ப் அல் வதா∴வை (பிரியாவிடை தவா∴பை) நிறைவேற்ற வேண்டும் எனக் கட்டளை இடப்பட்டார்கள். (மாதவிடாய் உண்டானதன் காரணமாகப் பிரியாவிடை தவா∴பை நிறைவேற்ற முடியாது போன) பெண்கள் மன்னிக்கப்பட வேண்டியவர்களே!”[37]

மாதவிடாய் உண்டான ஒரு பெண் புனித மஸ்ஜிதின் அருகில் இருந்து துஆ (பிரார்த்தனை) செய்வது விரும்பப்படவில்லை. ஏனெனில், இது நபி (ஸல்) அவர்களின் நடைமுறை அல்ல. மாறாக, (கட்டாயத் தவா∴பான) தவா∴ப் அல் இ∴பாதாவை அடுத்து மாதவிடாய் உண்டானால் வெளியேறிவிடும்படி அன்னை ஷ∴பிய்யா (ரலி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் இட்ட கட்டளைதான் அறிவிக்கப்பட்டுள்ளது. எனினும், தவா∴ப் அல் இ∴பாதாவை அல்லது உம்ராவை சார்ந்த தவா∴பை நிறைவேற்று முன்னர் ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் உண்டானால், அவள் சுத்தமானபின் இந்த தவா∴ப்களை நிறைவேற்ற வேண்டும்.

## 5 – பள்ளிவாயலில் தங்குதல்

மாதவிடாய் உண்டான ஒரு பெண் பள்ளிவாயலில் (ஈத் தொழுகை நடத்தப்படும் பகுதியில் கூட) தங்குவது தடைசெய்யப் பட்டுள்ளது. நபி (ஸல்) அவர்கள் மொழிந்ததாக உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஒரு ஹதீஸ் இதற்காதாரமாகின்றது.

அவர்கள் கூறுகின்றார்கள்:

“எப்பொழுதும் திரைக்குப் பின்னால் இருக்கும் மணமாகாத இளம் கன்னிகளும், நன்கு வளர்ந்த பெண் பிள்ளைகளும் அல்லது எப்பொழுதும் போல் திரைக்குப் பின்னால் இருக்கும் மணமாகாத இளம் கன்னிகளும், மாதவிடாய் உண்டான பெண்களும் வெளியே வந்து நற்காரியங்களில் பங்கெடுக்க வேண்டும்; அத்துடன் உண்மையான விசுவாசிகளின் மார்க்கக் கூட்டங்களில் கலந்து கொள்ள வேண்டும்.” இவ்வாறு மொழிந்து வந்த நபி (ஸல்) அவர்கள், “ஆனால், மாதவிடாய் உண்டான பெண்கள் முஸல்லாவை (தொழும் இடத்தை) விட்டு ஒதுங்கி இருக்க வேண்டும்” என முடித்தார்கள்.”[38]

## 6 – முறையான உடலுறவு கொள்ளல்

ஒரு கணவர் மாதவிடாய் உண்டான தனது மனைவியுடன் உடலுறவு கொள்வது தடை செய்யபட்டுள்ளது. அத்துடன், அது நிகழ்வதற்கான நிலைமையை அவள் ஏற்படுத்திக் கொடுப்பதும் அனுமதிக்கப்படவில்லை

அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ ويسألونك عن المحيض قل هو أذى فاعتزلوا النساء في المحيض ولا تقربوهن حتى يطهرن ﴾ [البقرة ، الآية ٢٢٢]

---

37. இருவரும் ஒப்பிய ஹதீஸ், ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol 2, பக். 469, ஹதீஸ் எண் 810.

38. அடிக் குறிப்பு 30ஐப் பார்க்கவும்.

*“இன்னும் மாதவிடாய் (குறித்த சட்டம்) பற்றியும் உம்மிடம் கேட்கின்றார்கள். நீர் கூறும்: “அது ஒரு தூய்மையற்ற நிலை ; ஆகவே மாதவிடாய்க் காலத்தில் பெண்களை விட்டு விலகி இருங்கள்; மேலும் அவர்கள் தூய்மை ஆகும் வரை அவர்களை அணுகாதீர்கள்.”*

(அல் குர்ஆன் 2:222)

இங்கு மாதவிடாய்க் காலம் பற்றியே குறிப்பிடப் படுகின்றது. அத்துடன் பெண்ணின் மறைவான பகுதிகளே தடைசெய்யப்பட்ட இடங்களாகவும் இருக்கின்றன. நபி (ஸல்) அவர்கள் மொழிந்தார்கள் : “உடலுறவு கொள்வதைத் தவிரவுள்ள எல்லாவற்றையும் செய்யுங்கள்.”[39] மாதவிடாய் உண்டான பெண்ணுடன் உடலுறவு கொள்வது தடை என்பதில் எல்லா முஸ்லிம்களும் ‘இஜ்மாஉ’ எனும் ஒருமித்த கருத்தைக் கொண்டுள்ளார்கள்.

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் உறுதியாக நம்பும் எவரும் இக் காரியத்தில் ஈடுபடுவது அனுமதிக்கப் படவில்லை. எவர் இக்காரியத்தில் ஈடுபடுகின்றாரோ அவர் அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் அடிபணியாது, விசுவாசிகளின் பாதையல்லாது மற்றைய பாதையில் செல்பவராவார்.[40]

இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்படுவதாவது : “யாரேனும் இத்தகைய காரியமொன்றில் ஈடுபட்டால் அவர் பெரும் பாவமொன்றை செய்தவர் ஆவார்.” அதே மத்ஹபைச் சேர்ந்த ஏனைய அறிஞர்களும் கூறுவதாவது: “யாரேனும் ஒருவர் மாதவிடாய் உண்டான ஒரு பெண்ணுடன் உடலுறவு கொள்வது அனுமதிக்கப் பட்டது எனக் கருதுவாராயின் அவர் குஃப்ரில் (மார்க்க நிராகரிப்பில்) வீழ்ந்துவிட்டவராகக் கருத வேண்டும்.”

ஒருவரின் அதி தீவிரமான பாலியல் உணர்வை, ஆசையை மட்டுப்படுத்தவென அவர் மாதவிடாய் உண்டான தனது மனைவியின் தடுக்கப்பட்ட பகுதிகளைத் தவிர்ந்த ஏனையப் பகுதிகளை முத்தமிடவும், கட்டித் தழுவவும், அணைத்துக் கொள்ளவும், அத்துடன் அவர்களுடன் கொஞ்சிக் குலாவவும் அனுமதியுண்டு. (அல்லாஹ் புகழுக்குரியவன்)

ஆனால், ஒரு முக்கியமான விடயத்தை மறந்து விடக் கூடாது. அதாவது, ஒரு கணவர் மாதவிடாய் உண்டான தனது மனைவியின் தொப்புழ்க்கும் முழங்காலுக்கும் இடைப்பட்ட பகுதியை எதைக் கொண்டேனும் மறைக்காது அணுகக் கூடாது. அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள், ‘அவர் (நபியவர்கள், எனது மாதவிடாயின் போது) ஓர் இஷாரை (இடைக்குக் கீழே அணியும் ஆடை) அணிந்து கொள்ளும்படி கட்டளையிட்டு, அதன்பின் என்னுடன் குலாவுவார்கள்.’[41] என்று கூறினார்கள்.

---

39. ஸஹீஹ் முஸ்லிம் (ஆங்கிலம்) Vol: 1, பக்: 175, ஹதீஸ் எண்: 592.

40. அல்லாஹ் எச்சரிக்கின்றான்: ﴿ وَمَن يُشَاقِقِ الرَّسُولَ مِن بَعْدِ مَا تَبَيَّنَ لَهُ الْهُدَى وَيَتَّبِعْ غَيْرَ سَبِيلِ الْمُؤْمِنِينَ نُوَلِّهِ مَا تَوَلَّى وَنُصْلِهِ جَهَنَّمَ وَسَاءَتْ مَصِيرًا ﴾
“மேலும், தனக்கு நேர்வழி தெளிவாகிவிட்ட பின்னரும், யார் இறைத் தூதரிடம் பகைமை காட்டுவதில் முனைப்பாக இருக்கின்றானோ, இறை நம்பிக்கையாளரின் போக்கிற்கு மாறான பாதையில் செல்கிறானோ, அவனை அவன் திரும்பிவிட்ட திசையிலேயே நாம் செலுத்துவோம்: பின்னர் அவனை நரகத்தில் வீசி எறிவோம். அது மிகக் கெட்ட தங்குமிடமாகும்.”

(அல் குர்ஆன் 4:115)

41. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol: 1, பக்: 180, ஹதீஸ் எண்: 298.

# 7 – விவாகரத்து

ஒருவர் தனது மனைவியை மாதவிடாய் உண்டாகி இருக்கும் வேளையில் விவாகரத்து செய்வது தடை செய்யப்பட்டுள்ளது.

அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ إذا طَلَّقْتُمُ النِّساءَ فَطَلِّقُوهُنَّ لِعِدَّتِهِنَّ ﴾[ الطلاق، الآية ١]

*"நீங்கள் பெண்களை விவாகரத்து செய்வீர்களாயின் அவர்களின் இத்தா (காலத்தை நிர்ணயிக்க) வசதியாக விவாகரத்து செய்யுங்கள்."*

(அல் குர்ஆன் 65:01)

இதன் கருத்து என்னவெனில், பெண்கள் விவாகரத்துச் செய்யப்படும் கட்டத்தில் அவர்கள் தமது இத்தாவை நிர்ணயிக்கக் கூடிய நிலைமை இருக்க வேண்டும் என்பதாகும். அதாவது அவர்கள் ஒன்றில் (மாதவிடாய், உடலுறவு கொள்வதால் உண்டான நிலைமை ஆகியவற்றிலிருந்து) சுத்தமாக அல்லது கருவுற்ற (தனால் உருவான பொறுப்பை நீக்கிக் கொள்ளவுள்ள குறிப்பிடப்பட்ட காலம் வரையிலான) தன்மையில் இருக்க வேண்டும்.

உதாரணமாக, ஒரு பெண் மாதவிடாயில் இருக்கும் பொழுது விவாகரத்து செய்யப்பட்டால், அவளது மாதவிடாயை நியமிக்கப்பட்ட இத்தாவின் ஒரு பகுதியாகக் கொள்ள முடியாது. (அடிக்குறிப்பு எண் 21 ஐப் பார்க்கவும்). அதனால், அவள் தனது இத்தாவை மிகச் சரியாக நிர்ணயிக்கத் தவறி விடுகின்றாள். மேலும், அவள் சுத்தமாக இருந்து, தனது கணவருடன் உடலுறவு கொள்பவளாகவும் இருந்தால், அக்கட்டத்தில் அவளை விவாகரத்து செய்தால் அப்பொழுது அவள் தனது இத்தாவைப் பற்றி நிச்சயமற்றத் தன்மையிலேயே இருப்பாள். (அல்லது கருத்தரிக்காத நிலையில் இருப்பாள்). எனவே, அவளது இத்தா எந்த வகையானது என்ற நிச்சயமற்ற நிலையில், அவள் (சுத்தமானவளா அல்லது கர்ப்பிணியா என்ற) நிலைத் தெளிவாகும் வரையில் அவளை அவளது கணவன் விவாகரத்து செய்வது தடைசெய்யப் பட்டுள்ளது.

இப்னு உமர் (ரலி) அவர்கள் தனது மனைவியை, மாதவிடாய் உண்டாகி இருக்கும் போது விவாகரத்து செய்துவிட்டார் என்பதை அறிந்த நபி (ஸல்) அவர்கள் கடும் கோபமுற்றார்கள் என அறிவிக்கப்படுகின்றது. இந்தத் தகவலைத் தந்த உமர் இப்னு கத்தாப் (ரலி) அவர்களிடம் "அவளைத் திருப்பி எடுங்கள்!" என அவர்கள் கூறினார்கள். (அடிக்குறிப்பு 21 ப் பார்க்கவும்) எனவே, ஒருவர் தனது மனைவி மாதவிடாய் உண்டாகியுள்ள வேளையில் அவளை விவாகரத்து செய்வது ஒரு பாவச் செயலாகும். அதற்கு பச்சாதாபப்பட்டு அல்லாஹ்விடம் மன்னிப்பு கேட்க வேண்டும்; பின்னர் அவரது முடிவை மாற்ற வேண்டும்; அவள் சுத்தமாகும் வரை தன்னுடன் வைத்திருப்பதுடன் அடுத்த மாதவிடாய் உண்டாகும் வரை காத்திருக்க வேண்டும்; அதன் பின்னர், அவள் சுத்தமான பின்பு, அவளுடன் உடலுறவு கொள்ளாது, அவளை வைத்திருப்பதா அல்லது விவாகரத்து செய்வதா என்ற இரண்டில் ஒரு முடிவை அவர் எடுக்க முடியும்.

மாதவிடாயின் போது ஒரு பெண்ணை விவாகரத்துச் செய்ய மூன்று நிபந்தனைகள் இருக்கின்றன.

அவையாவன :

முதலாவது : ஒரு கணவன் தனது மனைவியுடனான பாலியல் தொடர்புகளிலிருந்து ஒதுங்கி நிற்கும் நிலையில் அல்லது உண்மையிலேயே அவளுடன் உடலுறவு கொள்வதற்கு முன்னர், அவன் அவளை விவாகரத்து செய்வானாயின், அத்தகைய கட்டத்தில் அவளுக்கு இத்தா என்பது இல்லை என்பதுடன் அவளது விவாகரத்து அல்லாஹ்வின் கட்டளையுடன் மாறுபடுவதுமில்லை.

அல்லாஹ்வின் கட்டளை இதுதான்.

﴿ فَطَلِّقُوهُنَّ لِعِدَّتِهِنَّ ﴾

*"அவர்களின் இத்தா (காலத்தை நிர்ணயிக்க) வசதியாக விவாகரத்து செய்யுங்கள்."*

(அல் குர்ஆன் 65:1)

இரண்டாவது : சிலவேளை ஒரு பெண் கருத்தரித்து இருக்கும் போது மாதவிடாய் உண்டானால், முன்னர் விளக்கம் தந்தது போல், அவளது இத்தா அவளுடைய மாதவிடாயுடன் அன்றி கருத்தரித்தமையுடன் தொடர்புடையதாக அமைந்து விடுகின்றமை.

மூன்றாவது : ஏதாவது (அல் கூல் - AL KHUL) பெற்றுக் கொண்டு அதற்குப் பகரமாக விவாகரத்தை வழங்குவது. உதாரணமாக : ஒரு கணவனுக்கும் மனைவிக்கும் இடையே தொடரான பெரும் பிரச்சினைகளும், கொடுமை நிறைந்த தன்மையும் இருக்குமாயின் அந்தக் கணவன் தனது மனைவியை விவாகரத்து செய்வதற்குப் பகரமாக ஏதாவது பெற்றுக் கொள்வது அனுமதிக்கப்பட்டுள்ளது. இதற்கு ஆதாரம் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸ் ஒன்றில் காணப்படுகின்றது.

"தாபித் பின் கய்ஸ் பின் ஸமாஸ் அவர்களது மனைவியவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "யா றஸூலுள்ளாஹ்! நான், தாபித்தின் குணத்திலோ அவரது மார்க்கத்திலோ உள்ள குறைகளுக்காக அவரை குறை கூறவில்லை. ஆனால், நான் ஒரு முஸ்லிமாக இருந்து கொண்டு, (அவருடன் தொடர்ந்து வாழ்வதால்) இஸ்லாமிய மாண்புகளுக்கு முரணான முறையில் நடந்து கொள்ள நான் விரும்பவில்லை." என்றார்கள். இது தொடர்பாக நபி (ஸல்) அவர்கள், "உமக்கு உமது கணவன் (மகராகத்)[42] தந்த காணியை அவருக்குத் திருப்பிக் கொடுப்பீரா?' எனக் கேட்டார்கள். அவர் "ஆம்!" என்றார். பின்னர் நபி (ஸல்) அவர்கள் தாபிதைப் பார்த்து; "தாபிதே ! உங்கள் காணியை எடுத்துக் கொள்ளுங்கள், அவளை ஒரு முறை விவாகரத்து செய்யுங்கள்."[43] என்றார்கள்.

இதில் கவனிக்க வேண்டிய ஓர் அம்சம் என்னவெனில், நபி (ஸல்) அவர்கள், 'அவள் மாதவிடாய் உண்டாகி இருக்கிறாளா இல்லையா' எனக் கேட்கவில்லை என்பதுதான். இத்தகைய நியாயமான காரணங்களைப் பொறுத்து, தனது மாதவிடாய்த் தன்மையை கருத்தில் கொள்ளாது ஒரு மனைவி விவாகரத்து கோரி நிற்க முடியும். மாதவிடாய்க் காலத்தில் பெண்கள் விவாகரத்து செய்யப்படுவதானது அவர்களது இத்தாவை நீடிக்கச்

---

42. மகர் (மஹர் - MAHAR) : மணமகள் பெறும் சீர்வரிசை.

43. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol: 7, பக்: 150, ஹதீஸ் எண்: 197.

செய்து அவர்களுக்குத் தீமையை தந்துவிட முடியும். எனினும், கொடுமைப்புரிவது, பாரிய பிரச்சினைகளில் சிக்கிச் சீரழிவது போன்ற தீமைகள், இத்தா நீடிப்பதனால் வரும் தீமைகளைவிட மிகவும் பயங்கரமானதே. எனவே இத்தகைய கட்டத்தில் விவாகரத்துக் கோரிக்கையை ஏற்பதன் மூலம் இத் தீமைகளை அகற்றுவது மிகவும் அவசரமும் அவசியமுமாகும். இதனால்தான் நபி (ஸல்) அவர்கள் தாபித் பின் கய்ஸின் மனைவியிடம் அவளது மாதவிடாய் நிலைமைப் பற்றிக் கேட்கவில்லை.[44]

ஒரு விடயம்;மாதவிடாய் உண்டான ஒரு பெண் பற்றி எதுவும் கூறுவதற்கு ஆதாரம் இல்லாததால், அவளுடன் திருமண ஒப்பந்தம் செய்வது அனுமதிக்கப்பட்டுள்ளது. ஆயினும், குறிப்பிட்ட கணவன் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். சிலவேளை அவரால் தனது பாலியல் உணர்வுகளையும் ஆசையையும் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாதெனக் கண்டால், அவரது மனைவி மாதவிடாயிலிருந்து சுத்தமாகும் வரை அவளுடன் தனித்திருக்கக் கூடாது.

# 8 – விவாகரத்தின் இத்தாவும் மாதவிடாயுடனான தொடர்பும்

ஒரு கணவன் தனது மனைவியுடன் முதல் உடலுறவு கொண்டபின்னரோ, அல்லது, அவளுடன் தனிமையில் இருந்த பின்னரோ, அவன் அவளை விவாகரத்து செய்தால், அவள் இத்தாவாக மூன்று மாதவிடாய்களைப் பூரணமாகப் பூர்த்தி செய்ய வேண்டும். (அதன் மூலம் அவள் மாதவிடாயுடைய பெண்ணாவாளேயன்றி கர்ப்பிணியல்ல என்பது தெளிவாகும்.) இது அல்லாஹ்வின் கீழ்க் காணும் வசனத்துடன் இணக்கமானதாகும்.

அவன் கூறுகின்றான்:

﴿ والْمُطَلَّقاتُ يَتَرَبَّصْنَ بِأَنْفُسِهِنَّ ثَلاثَةَ قُروءٍ ﴾[ البقرة، الآية ٢٢٨]

*"தலாக் சொல்லப்பட்ட பெண்கள் மூன்று மாதவிடாய்கள் ஆகும்வரை தாமாகவே பொறுத்திருக்க வேண்டும்."*

(அல் குர்ஆன் 2:228)

சிலவேளை, அவள் கருத்தரித்திருந்தாள் அவளுடைய இத்தா பிள்ளைப் பிரசவம் வரைத் தொடரும். (அவள் குறை மாத அல்லது நிறை மாதக் கர்ப்பிணியாயினும் சரியே!)

இது தொடர்பாக அல்லாஹ் கூறுவதாவது :

﴿ وَأُولاتُ الأحمالِ أجَلُهُنَّ أنْ يَضَعْنَ حَمْلَهُنَّ ﴾ [ الطلاق، الآية ٤]

---

44. அல் முஃனியில் பதிவாகியுள்ளது. Vol:7, தா-மீம், பக்:52.

*"மேலும், கர்ப்பிணிகளுக்கான இத்தா வரம்பு (அவர்கள் விவாகரத்து செய்யப்பட்டோ அல்லது அவர்களது கணவர்கள் மரணித்திருந்தாலோ) அவர்கள் குழந்தை பெற்றெடுப்பதுடன் முடிகின்றது."*

(அல் குர்ஆன் 65:4)

சிலவேளை, பருவமடையாத பெண்களுக்குப் போல் அவளுக்கு ஏதேனும் (மாதவிடாய்) இல்லையாயின், அல்லது மாதவிடாய் உண்டாகும் வயதெல்லையைக் கடந்துவிட்டாளாயின், அல்லது அறுவை வைத்தியம், மூலம் அவளது கருப்பை அகற்றப்பட்டவளாயின், இத்தகைய இன்ன பிற கட்டங்களில் அவளுடைய இத்தா சரியாக மூன்று மாதங்களாகும். அல்லாஹ்வின் கூற்று இதற்காதாரமாகின்றது.

அவன் கூறுகின்றான் :

﴿ واللائي يَئِسْنَ مِنَ المَحيضِ من نسائِكُم إنْ ارتَبْتُمْ فَعِدَّتُهُنَّ ثَلاثَةُ أشهرٍ واللائي لَمْ يَحِضْنَ ﴾ [ الطلاق، الآية ٤]

*"உங்கள் பெண்களில், எவர்கள் 'இனி மாதவிலக்கு வராது' என்று நம்பிக்கையிழந்து விட்டிருக்கின்றார்களோ அவர்களுடைய விஷயத்தில் உங்களுக்கு ஏதாவது சந்தேகம் வந்தால், (நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள்:) அவர்களுடைய இத்தா காலம் மூன்று மாதங்களாகும். மேலும், எந்தப் பெண்களுக்கு இதுவரையிலும் மாதவிலக்கு ஊரவில்லையோ அவர்களுக்கான விதிமுறையும் இதுவே."* *

(அல் குர்ஆன் 65:4)

● சிலவேளை, மாதவிடாய் உண்டாகும் ஒரு பெண் ஏதோ சில (நோய், குழந்தைக்குப் பாலூட்டுதல் போன்ற) காரணங்களால் மாதவிடாய் உண்டாகாது நிற்கக் காண்கின்றாள். அவள் தனது மாதவிடாய் மீண்டும் வரும் வரை (அது மிக நீண்ட காலமாயினும்) இத்தா இருக்க வேண்டும். அப்பொழுது அவள் இத்தாவின் காலத்தைக் கணக்கிட்டு வரவேண்டும். அவளுடைய அந்த நிலைக்கான காரணங்கள் நீங்கியும் மாதவிடாய் உண்டாகவில்லையாயின், அக்காரணங்கள் நீங்கிய காலத்திலிருந்து ஆரம்பமாகும் அவளது இத்தா பூரணமாக ஒரு வருடத்தைக் கொண்டிருக்க வேண்டும். இதுதான் இஸ்லாமிய சட்டத்திற்குப் பொருந்தும் மிகச் சரியான கருத்தாகும். இவளது நிலை, அறியாக் காரணங்கள் நிமித்தம் மாதவிடாய் நின்றுவிட்ட பெண்களின் நிலைக்கு ஒப்பானதாகும். இவளது இத்தாவின் காலம் ஒரு வருடமாகும்: (பொதுவாக பிள்ளைப் பிரசவக் காலமாகக் கணிக்கப்படும்) ஒன்பது மாதமும், அவளது அசல் மாதவிடாய்க் காலத்திற்கான மூன்று மாதமும் இதிலடங்கும்.

● ஒரு பெண்ணுக்கு விவாக ஒப்பந்தம் நடைபெற்று முடிந்துவிட்டது. ஆனால், அவளது கணவனுடன் அவள் தனித்திருக்கவில்லை; உடலுறவு கொள்ளவும் இல்லை. இந் நிலையில் அவர்களிடையே விவாகரத்து நிகழுமாயின், அப்பொழுது எத்தகைய இத்தாவும் அவள் அனுஷ்டிக்க வேண்டியது இல்லை.

---

* கணவன் மரணித்த போது, அவரது மனைவியின் நிலை இதிலிருந்து சற்று மாறானதே. அல்லாஹ் இதுபற்றி இவ்வாறு கூறுகின்றான்:

*"உங்கள் எவரேனும் மனைவியரைவிட்டு மரணமடைந்துவிட்டால், அந்த அவருடைய மனைவியர் நான்கு மாதம் பத்து நாட்கள் தாமாகக் காத்திருக்க வேண்டும்."*

(அல் குர்ஆன் 2:234)

அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ يا أيّها الذينَ آمنوا إذا نَكَحْتُمُ المؤمناتِ ثُمَّ طلّقتُموهُنَّ مِـنْ قَبْـلِ أن تَمَسـوهُنَّ فما لكم عليهِنَّ مِنْ عِدَّةٍ تَعتَدونَها ﴾[ الأحزاب، ٤٩ ]

*"விசுவாசிகளே! இறைவிசுவாசங் கொண்ட பெண்களை நீங்கள் திருமணம் செய்து பின்னர் அவர்களைத் தொடுவதற்கு முன்னர் விவாகரத்து செய்துவிட்டால், நிறைவேற்றுமாறு நீங்கள் கோரக்கூடிய வகையில் உங்களுக்காக அவர்கள் மீது 'இத்தா' எதுவும் இல்லை. எனவே, அவர்களுக்கு கொஞ்சம் பொருள்களைக் கொடுத்து நல்ல முறையில் அவர்களை அனுப்பி வைத்து விடுங்கள்."*

(அல் குர்ஆன் 33:49)

## 9 – சுதந்திரமான கருப்பை

கருத்தரிப்பதிலிருந்து சுதந்திரமடைந்த கருப்பையொன்று ஒரு பெண்ணின் மாதவிடாய் நிலையை ஒத்திருக்கின்றது. எனவே, அதற்கென சில இஸ்லாமியச் சட்டங்களும் இருக்கின்றன.

உதாரணமாக: ஒரு விவாகமான பெண்ணுக்கு உறவு முறையான ஒருவர் மரணிக்கின்றார் என வைத்துக் கொள்ளுங்கள். அவருக்குக் குறிப்பிட்டதொரு வாரிசுச் சொத்து இருக்கின்றது. இந்த நிலையில், அந்தப் பெண் கருத்தரித்து இருக்கின்றாளா அல்லது வாரிசுச் சொத்தை பகிர்ந்தளிக்கும் நிலை தொடர்பாகத் தீர்மானம் எடுக்கும் நிலையில் இல்லையா என்பன அறிவது அவசியம்.

எனவே, அவளது கணவன் கீழ்க்காணும் அம்சங்கள் நன்கு தெளிவாகும் வரை அவளுடன் பாலியல் தொடர்பு கொள்ளக்கூடாது.

அ) அவள் மாதவிடாய் உண்டாகும் தன்மையுடையவள்: அவளது அந்த நிலையில் கருப்பை சுதந்திரமாக இருப்பதால் வாரிசுச் சொத்தின் அவசியப் பொருத்தம் இல்லை எனத் தெளிவுபெறல்.

ஆ) வாரிசுச் சொத்துக்கு உரிமையுடைய நபர் மரணிக்கும்போது அவள் கருத்தரித்து இருக்கின்றாள் என்பது ஊர்ஜிதமாதல். இந்நிலையில், வாரிசுச் சொத்து பகிர்ந்தளிக்கையில் புதிதாகப் பிறக்கும் ஜீவனும் கருத்தில் கொள்ளப்பட வேண்டும்.

## 10 – குஸ்ல் (குளிப்பு) கட்டாயமாதல்

மாதவிடாய் உண்டான ஒரு பெண் அதன் இறுதி கட்டத்தில் (அதாவது மாதவிடாயிலிருந்து சுத்தமான பின்) குளிப்பது ஒரு கட்டாய கடமையாகும். இது பற்றி (அபூ ஹுபைஸின் மகள்) ஃபாத்திமாவுக்கு நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு மொழிந்தார்கள்:

"உங்களுடைய மாதவிடாய் ஆரம்பமானால், தொழுகையை விடுங்கள் (தொழ வேண்டாம்). அது

(மாதவிடாய்) முடிவுற்றதும் உங்கள் உடலில் உள்ள இரத்தத்தை நன்றாகக் கழுவி (முழுமையான குளிப்பை மேற்கொள்வதன் மூலம் சுத்தமாகி) விடுங்கள்! பின்னர் தொழுகையை ஆரம்பியுங்கள்."[45]

குளிப்பைப் பொறுத்த வரையிலான குறைந்தபட்ச கடமை என்னவெனில் தலையின் மேற்பகுதி உட்பட உடலின் எல்லாப் பகுதிகளையும் நன்கு கழுவி விடுவதாகும். இக்குளிப்பை நிறைவேற்றவுள்ள சிறப்பான முன்மாதிரி நபி (ஸல்) அவர்கள் காட்டித்தந்த வழிமுறையாகும்.

ஷக்ல் என்பவரின் மகள் அஸ்மா கட்டாயக் குளிப்பு பற்றி நபி (ஸல்) அவர்களிடம் வினவிய போது கீழ்க்கண்டவாறு அவர்கள் பதில் அளித்தார்கள் என ஹதீஸ்களில் காணப்படுகின்றது.

ஒரு ஹதீஸ் இவ்வாறு உள்ளது :

"உங்களில் ஒவ்வொருவரும் ஸித்ர் மரத்தின் (இலைகள் கலந்த) நீரைப் பயன்படுத்தி நன்றாக சுத்தம் செய்துகொள்ள வேண்டும். பின்னர், அவள் தனது தலையில் நீரை ஊற்றி (தலை) மயிரின் வேரை (அந்த நீர்) சென்றடையும் வரை நன்றாகத் தேய்க்க வேண்டும். பின்னர், அவள் நீரை அதன் (தலையின்) மீது ஊற்றிக்கொள்ள வேண்டும். அதற்குப் பிறகு கஸ்தூரி கலந்த பருத்தித் துணித் துண்டொன்றை எடுத்து அதன் மூலம் சுத்தம் செய்து கொள்ள வேண்டும்." என நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள். அப்பொழுது "அதைக் கொண்டு எவ்வாறு சுத்தம் செய்வது ? என அஸ்மா கேட்டதும், நபி (ஸல்) அவர்கள்: "சுப்ஹானல்லாஹ்" என்று அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள். இரத்த அடையாளங்கள் நீங்கும் வரை சுத்தம் செய்யுங்கள்" என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.'[46]

மாதவிடாய் உண்டான ஒரு பெண் தனது தலை முடியின் அடிப்பாகம் வரை நீர் செல்வதைத் தடுக்கும் வகையில் முடியை நெருக்கமாக பின்னிவிடாத வரையில், கட்டாயக் குளிப்புக்குப் போகும்போது முடியை அவிழ்த்து விடுவது கடமையில்லை.

உம்மு ஸலாமாஹ் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள் :

"நான் தலை முடியை நெருக்கமாக பின்னிவிட்ட ஒரு பெண். எனவே, உடலுறவு கொள்வதனால் (அல்லது மற்றோர் அறிவிப்பின் படி மாதவிடாய் உண்டானால்) குளிப்பதற்காக, பின்னிவிடப்பட்ட தலைமுடியை அவிழ்த்து விட வேண்டுமா?" என்று. "இல்லை, நீங்கள் மூன்று முறை கை நிறைய நீரை எடுத்து உங்கள் தலையில் ஊற்றிக் கொண்டால் போதுமானது. பின்னர், உங்கள் மீது நீரை ஊற்றுங்கள். இவ்வாறு (செய்வதன் மூலம்) நீங்கள் சுத்தம் அடைவீர்கள்."[47] நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

மாதவிடாய் உண்டான ஒரு பெண் குறிப்பிட்டதொரு தொழுகைக்குரிய வேளையில்

---

45. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol: 1, பக்: 196, ஹதீஸ் எண்: 327.

46. ஸஹீஹுல் முஸ்லிம் (ஆங்கிலம்) Vol: 1, பக்: 188, ஹதீஸ் எண்: 649.

47. ஸஹீஹ் முஸ்லிம் (ஆங்கிலம்) Vol:1, பக்: 187, ஹதீஸ் எண்: 643.

சுத்தமடைவாளாயின், உடனே கட்டாயக் குளிப்பை மேற்கொள்ள வேண்டும். அவ்வாறு குளித்தால் தொழுகையை தாமதப்படுத்தாது அதற்குரிய வேளையில் நிறைவேற்ற முடியும். சிலவேளை, அவள் பிரயாணத்தில் இருக்கின்றாள்; நீர் கிடைக்கவில்லை. அல்லது நீரிருந்தும் அதைப் பயன்படுத்தினால் அவளுக்குத் தீங்கு (நோய் அல்லது வேரேதும்) ஏற்படும் என்ற அச்சம் இருக்குமாயின், அவள் 'தயம்மும்'[48] செய்யலாம். அவள் நீரைப் பயன்படுத்தத் தடையாயுள்ள நிலை நீங்கும் வரை அப்படிச் செய்யலாம். பின்னர் அவள் குளிக்க முடியும்.

குறித்ததொரு தொழுகை வேளையில் சுத்தமாகிவிடும் சில பெண்கள் இருக்கின்றனர். அவர்கள் குளிப்பதைப் பிற்படுத்துகின்றவர்களாவார்கள். அதற்கு அவர்கள் கூறும் காரணம் என்னவென்றால், 'குறித்த தொழுகைக்குரிய காலத்தினுள் தம்மை சுத்தப்படுத்திக் கொள்வது சாத்தியமில்லை' என்பதாகும். இது கடமையை தட்டிக் கழிக்கும் கூற்றாகும். ஏனெனில், அவர்கள் தம்மை சுத்தமாக்கி விடும் கட்டாயக் குளிப்பு சார்ந்த கண்டிப்பான கடமைகளை ஒழுங்குற நிறைவேற்றவும், குறித்த தொழுகையை உரிய நேரத்தில் நிறைவேற்றவும் போதிய அவகாசம் இருக்கின்றது. பின்னர் அவர்களுக்கு வாய்ப்பும் வசதியும் கிட்டும்போது முழு அளவிலான குளிப்பை மேற்கொள்ள முடியும்.



48. தயம்மும்: ஒருவர் தனது இரண்டு கைகளையும் சுத்தமான மண்ணில் இலேசாக அடித்து, பின்னர் அவ்விரு கைகளின் உள்ளங் கையால், அவற்றின் வெளிப்பக்கத்தை ஒன்றை மற்றொன்றாகத் தடவிவிட வேண்டும். பின்னர், கைகளில் உள்ள தூசியைத் தட்டிவிட்டு முகத்தைத் தடவிக் கொள்ள வேண்டும். நீர் கிடைக்காத போது இது நடைமுறைக்கு வருகின்றது.

5

# இஸ்திஹாதாஹ்!

இஸ்திஹாதாஹ் என்பது ஒரு பெண்ணின் பெண்ணுறுப்பிலிருந்து நிற்காமலேயே அல்லது மிகக் குறைந்த காலத்திற்கு (மாதாந்தம் இரண்டொரு நாட்களுக்கு) நின்று மீண்டும் வெளிவரும் இரத்தத்தைக் குறிக்கும்.

## 1 – நிற்காமல் வெளிவரும் இரத்தம் :

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

"பாத்திமா பிந்த் அபீ ஹுபைஸ் அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், "நான் சுத்தமாகின்றேனில்லை (இரத்தம் வெளிவருவது நிற்பதில்லை)" என்றோ, மற்றோர் அறிவிப்பில், "எனக்கு (மாதவிடாய் காலங்களுக்கிடையில்) நிற்காது இரத்தம் வெளிவருகின்றது. அதனால் நான் சுத்தமாக இல்லை!"[49] என்றோ கூறியதாக.

## 2 – மிகக் குறைந்த காலத்திற்கு நின்று, வெளிவரும் இரத்தம் :

நபி (ஸல்) அவர்களிடம் வந்த ஹம்னாஹ் பிந்த் ஜஹ்ஷ் அவர்கள், "எனது மாதவிடாய் அளவில் கூடியதும் தாங்க முடியாததுமாகும்!" எனக் கூறினார்"[50]

# இஸ்திஹாதாஹ்வின் பலதரப்பட்ட நிலைகள்

ஒன்று : ஒரு பெண்ணைப் பொறுத்த வரையில் இஸ்திஹாதாஹ்வுக்குப் புறம்பாக, அவளது மாதவிடாய்க்கு ஒழுங்கான, தெளிவான காலச்சக்கரம் ஒன்றுண்டு. அதற்கமைய குறித்த காலத்தில் அவளுக்கு மாதவிடாய் உண்டாகும். அப்பொழுது தொழுகை, நோன்பு மற்றும் விடயங்களில் மாதவிடாய்த் தொடர்பான சட்டங்களையே அவள் பின்பற்றுவாள். இக் குறித்த மாதவிடாய்க் காலத்திலன்றி மற்றைய காலத்தில் வெளிவரும் இரத்தம் 'இஸ்திஹாதாஹ்' என கணிக்கப்பட்டு அதற்குரிய சட்டங்கள் பின்பற்றப்பட வேண்டும்.

உதாரணமாக : ஒரு பெண் ஒவ்வொரு மாதத் தொடக்கத்திலும் ஆறு நாட்களுக்கு சாதாரணமான நிலையில் இரத்தம் வெளியேறக் காண்கிறாள். பின்னர் அவளுக்கு இரத்த வெளியேற்றம் நிற்காமல் போக ஆரம்பிக்கின்றது. இப் பெண்ணைப் பொறுத்தவரையில் ஒவ்வொரு மாதமும் ஆறு நாட்கள் வெளியேறும் இரத்தமே மாதவிடாய் சார்ந்ததாகும். அதைத் தொடர்ந்து வெளியேறும் இரத்தம் இஸ்திஹாதாஹ் சார்ந்ததாகும்.

---

49. ஸஹீஹுல் புகாரி (அரபு-ஆங்கிலம்) Vol: 1,பக்: 194, ஹதீஸ் எண்: 322ன் ஒரு பகுதி.

50. இதனை ஸஹீஹான ஹதீஸென அறிவிப்பாளர்களான அஹ்மத், அபூதாவுத், திர்மிதீ ஆகியோர் கூறுகின்றனர்கள். இமாம் அஹ்மத் இதனை ஸஹீஹான ஹதீஸ் என அறிவிக்கும் போது, இமாம் புகாரி அவர்கள் இதனை சிறப்பானதொரு ஹதீஸ் என அறிவித்துள்ளார்கள்.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கும் கீழ்க்காணும் ஹதீஸ் இதற்காதாரமாக அமைகின்றது.

"எனக்கு (மாதவிடாய் காலங்களில்) நிற்காது இரத்தம் வெளிவருகின்றது. அதனால் நான் சுத்தமாக இல்லை. நான் தொழுகையை விட்டு விடட்டுமா?" என பாத்திமா பிந்த் அபீ ஹுபைஸ் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "இல்லை; அது ஓர் இரத்த நாலத்திலிருந்தாகும். நீர் வழமையாக மாதவிடாய் உண்டாகும் நாட்களுக்கு மட்டும் தொழுகையை விட்டுவிடும். பின்னர், குளித்துவிட்டு தொழுகையை மேற்கொள்ளும்."[51] என்றார்கள்.

'ஸஹீஹ் முஸ்லிம்' எனும் கிரந்தத்தில் வரும் மற்றொரு ஹதீஸ் இவ்வாறு மொழிகின்றது:

"தொடர்ச்சியாக இரத்தம் வெளிவந்து கொண்டிருந்த உம்மு ஹபீபாஹ் பிந்த் ஜஹ்ஸ் அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு நவின்றார்கள்! "உமது மாதவிடாயின் போது (தொழுகையிலிருந்து) விலகி நில்லும். பின்னர் கழுவிவிட்டு தொழும்!"[52] இப்படி சுத்தம் செய்து அவள் தொழுத பின் அவளது இரத்த வெளியேற்றம் பற்றி கவனித்தல் அவசியம்.

இரண்டு : ஒரு பெண்ணுக்கு இஸ்திஹாதாஹ்வுக்குப் புறம்பாக, அவளது மாதவிடாய் தொடர்பாக ஒழுங்கான தெளிவான காலச்சக்கரம் ஒன்றில்லை. எனவே, சாதாரண மாதவிடாய் இரத்தத்திற்கும் இஸ்திஹாதாஹ் சார்ந்த இரத்தத்திற்கும் இடையிலான வேறுபாட்டை அறிந்து கொள்வதற்கு, அவள் இந்த இரண்டு விதமான இரத்தத்தின் தன்மைகளை அவதானித்து வர வேண்டும். மாதவிடாய் இரத்தத்தின் அடர்த்தி, கருமை நிறம், குறிப்பிட்டதொரு வகையான மணம் என்பவற்றிலிருந்து இதை மாதவிடாய் இரத்தம் எனப் புரிந்து கொள்ள முடியும்.

உதாரணமாக : ஒரு பெண் தொடராக இரத்தம் வரக் காண்கின்றாள். அதில், மாதத்தின் முதல் பத்து நாட்களிலும் கருமை நிறமுடையதாகவும், ஏனைய நாட்களில் சிகப்பு நிறமுடையதாகவும் இருக்கக் காண்கின்றாள். அல்லது முதல் பத்து நாட்களில் அடர்த்தியாகவும் மீதி நாட்களில் மென்மையாகவும் இருக்கக் காண்கின்றாள். அல்லது முதல் பத்து நாட்களில் மாதவிடாய் இரத்தத்தின் மணம் வரவும் ஏனைய நாட்களில் எதுவித மணமும் இல்லாதிருக்கவும் காண்கின்றாள். இதற்கமைய அவளது இரத்தம் கருமையாகவும், அடர்த்தியாகவும், குறித்த மணம் வீசுவதாயும் இருக்கும் காலம் மாதவிடாய்க் காலமாகும். அதைத் தொடர்ந்து வரும் இரத்தம் இஸ்திஹாதாஹ் எனக் கணிக்கப்படும்.

நபி (ஸல்) அவர்கள் ஃபாத்திமா பிந்த் அபீ ஜஹ்ஸ் அவர்களுக்குச் சொன்னார்கள்:

"மாதவிடாய் இரத்தம் வெளிவரும்போது, அது கறுப்பாகவும் (மாதவிடாய் இரத்தமே என) புரிந்துக் கொள்ளக் கூடியதாகவும் இருப்பின்; அப்படியான அது வந்தால் தொழுகையிலிருந்து விலகி இருங்கள். எனினும், வித்தியாசமான தன்மையுடைய இரத்தம் வரக் காணின் ஒழு (சுத்தம்) செய்து தொழுங்கள். ஏனெனில்,

---

51. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol: 1, பக்: 194, ஹதீஸ் எண்: 322.

52. ஸஹீஹுல் முஸ்லிம் (ஆங்கிலம்) Vol: 1, பக்: 169, ஹதீஸ் எண்: 654.

அது ஓர் இரத்த நாலத்திலிருந்தேயாகும்."[53]

மூன்று : ஒரு பெண்ணுக்கு அவளது மாதவிடாய் தொடர்பாக ஒழுங்கான காலச் சக்கரமோ, மேற்கூறிய வகையிலான குறிப்பிட்ட வித்தியாசமான தன்மைகளோ காணப்படவில்லை. ஒரே வகையான தன்மையுடைய இரத்தம் வடிதலோ அல்லது இயற்கைக்கு மாறான தன்மையுடைய இரத்தம் வடிதலோ இஸ்திஹாதாஹ்விலிருந்து மாதவிடாயைப் பிரித்தறிவதை சிரமமாக்கி விடுகின்றன. இந்நிலையில் தொடர்ச்சியாகவும், என்னவென்று தீர்மானிக்க முடியாமலும் வெளிவரும் இரத்தப் போக்கை சந்திக்கின்ற ஒரு பெண், அநேகமான பெண்களைப் போல், இரத்தம் வரக் கண்ட நாளிலிருந்து 6 - 7 நாட்களை மாதவிடாய் நாட்கள் என்றே கொள்ள வேண்டும். இந்த நாட்களுக்கு மேல் வெளிவரும் இரத்தத்தை இஸ்திஹாதாஹ் என்றே கொள்ள வேண்டும்.

உதாரணமாக : ஒரு பெண் மாதத்தின் ஐந்தாம் நாள் தன்னிலிருந்து இரத்தம் வெளிவருவதை முதலாவதாகக் காண்கின்றாள், தொடர்ந்து வெளிவரும் அந்த இரத்தத்தின் நிறம், மணம், அடர்த்தி என்பவற்றைக் கொண்டு எந்த வித்தியாசத்தையும் விளங்கிக் கொள்ள முடியாது இருக்கின்றாள். அந் நிலையில் அவளது மாதவிடாய் நாட்களை ஒவ்வொரு மாதமும் ஐந்தாம் தினத்திலிருந்து ஆறு அல்லது ஏழு நாட்கள் என கணிக்க வேண்டும். இது கீழ்க்காணும் ஹதீஸுடன் இணக்கம் கொள்கின்றது.

"ஒரு முறை ஹம்னாஹ் பிந்த் ஜஹ்ஸ் (ரலி) அவர்கள், ரஸூல் (ஸல்) அவர்களை விளித்து, "யா ரஸூலுல்லாஹ்! நான் அளவில் கூடியதும், தாங்க முடியாததுமான மாதவிடாயையுடைய பெண்ணாவேன். எனவே, அது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அது என்னை தொழுகையிலிருந்தும் நோன்பு நோற்பதிலிருந்தும் தடுத்து நிறுத்தியுள்ளது." என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீர் பருத்தித் துணியை பயன்படுத்துவது நல்லது என ஆலோசனைக் கூறுகிறேன். அதை உமது மறைவிடத்தில் வையும். அது இரத்தத்தை உறிஞ்சி எடுத்துக் கொள்ளும்." என்றார்கள். அப்பொழுது, "மிக அதிகமாக வருகின்றதே!" என்றார் அந்தப் பெண். இந்த ஹதீஸில் இறைத் தூதர் (ஸல்) அவர்கள் மொழிந்தார்கள் : "இது ஷைத்தானின் கோளாறிலிருந்தும் உள்ளது. எனவே, உங்கள் மாதவிடாயை ஆறு அல்லது ஏழு நாட்கள் எனக் கணியுங்கள். அது எதுவாக இருக்க வேண்டும் என்பதை மிக அறிந்தவன் அல்லாஹ் ஒருவனே, பின்னர் கழுவிக் கொள்ளுங்கள்; நீங்கள் நன்கு சுத்தமாக இருப்பதாகக் கண்டால் இருப்பத்திமூன்று அல்லது இருபத்து நான்கு தினங்களின் இரவு பகலில் தொழுங்கள்; அத்துடன் நோன்பும் நோற்றுக் கொள்ளுங்கள். இது உங்களுக்குப் போதுமானது."[54]

நபி (ஸல்) அவர்கள் இங்கு 'ஆறு அல்லது ஏழு நாட்கள்' என மொழிந்தது ஹம்னாஹ் பிந்த் ஜஹ்ஸ் (ரலி) அவர்களுக்கு தாம் விரும்பிய எதையேனும் தெரிந்தெடுத்துக் கொள்வதற்கல்ல. மாறாக, (மற்ற

---

53. இதனை அபூதாவுத், அந் நிஸாஈ அறிவிக்க, இப்னு ஹிப்பான், அல் ஹாக்கிம் ஆகியோர் ஸஹீஹானது எனக் கூறியுள்ளனர். இதன் ஆசிரியர் குறிப்பிடுவதாவது: இந்த ஹதீஸை அறிவிப்பவர்கள், விளக்கம் தருபவர்கள் பற்றி விமர்சனக் கருத்துக்கள் இருந்த போதிலும், சில முஸ்லிம் அறிஞர்கள் இதனை ஆலோசனைக்கு எடுத்துக் கொள்வது நடைமுறையில் இருந்தது. எனவே அனேகமான பெண்கள் எதிர் நோக்குகின்ற சராசரி (ஆறு அல்லது ஏழு நாட்கள்) காலத்தை ஆலோசனைக்கு எடுத்துக் கொள்வதைவிட இது நன்மை பயப்பதாகும்.

54. அடிக்குறிப்பு எண் 50 ஐப் பார்க்கவும்

பெண்களுள்) தனது வயது, உடல் அமைப்பு, பிள்ளைகளின் எண்ணிக்கை போன்றவற்றில் தன்னுடன் ஒத்துவருபவர்களுடன் தன்னிலையை ஒப்பு நோக்கி விவரங்களை அறிந்து கொள்வதற்கே. அப்பொழுது அநேகமாக அவருடன் ஒத்துவரும் பெண்களுக்கு ஆறு நாட்கள்தான் மாதவிடாய் உண்டாகின்றதென்றால், அவர் தனக்கும் உரிய நாட்கள் ஆறு என்றே கருத வேண்டும்; சிலவேளை மற்ற பெண்களுக்கு ஏழு நாட்கள் என்றால் அவருக்கும் ஏழு நாட்கள் என்றே கருத வேண்டும்.

## "முஸ்தஹாதாஹ்" வை ஒத்திருக்கும் ஒருவர் !

பெண்ணுறுப்பிலிருந்து இரத்தம் வெளிவருவதற்கு (இரண சிகிச்சை - Surgery போன்ற) ஏதேனும் காரணிகள் இருக்க முடியும். அவ்வாறான இரண்டு வகைகள், மாதிரிகள் இருக்கின்றன:

1- இரண சிகிச்சையைத் தொடர்ந்து அவளுக்கு மாதவிடாய் உண்டாவது சாத்தியமில்லை. உதாரணமாக: கருப்பையை அல்லது அதன் தடுப்பம்சத்தை அகற்றுவதைக் குறிப்பிடலாம். இத்தகையவற்றிற்கு இஸ்திஹாதாஹ் தொடர்பான சட்டங்கள் பொருந்தமாட்டாது. இந்நிலையில் ஒரு பெண்ணுக்கு இரத்தம் வரக்கண்டால், மஞ்சள் நிறத்தில் ஏதும் வெளிப்படுவதற்கான சட்டங்களே இதற்கு பொருந்துவனவாக அமையும்.* எனவே, அவள் தொழுவது, நோன்பு நோற்பது போன்றவற்றிலிருந்து தன்னைத் தடுத்துக் கொள்ளக் கூடாது. அவற்றை உரிய முறையில் செய்துவர வேண்டும். மேலும், இத்தகைய கட்டத்தில் அவள் தனது கணவனுடன் உடலுறவு கொள்வதும் தடை செய்யப்படவில்லை. அதோடு இவ்விரத்த வெளியேற்றம் தொடர்பாக அவள் கட்டாயக் குளிப்பை மேற்கொள்ள வேண்டிய கட்டாயமும் இல்லை. எனினும், அவள் தன்னைக் கழுவி, நன்கு சுத்தம் செய்து, பர்ளான தொழுகைக்குரிய நேரம் வந்தால் அல்லது சுன்னத்தான தொழுகைகள் தொழ நினைத்தால், அப்பொழுது வுளூஉ செய்துகொள்ள வேண்டும்; தொழுகையை மேற்கொள்ள வேண்டும்.

2. இரண சிகிச்சையைத் தொடர்ந்து அவளுக்கு மாதவிடாய் வருவது நின்றுவிடும் என்ற நிச்சயம் இல்லை. அவளுக்கு மாதவிடாய் வருவது சாத்தியமேயாகும். இந் நிலையில் முஸ்தஹாதாஹ் (இஸ்திஹாதாஹ்வுக்கு ஆளான பெண்) சார்ந்த சட்டங்கள் இதற்குப் பொருந்தும். இதற்காதாரமாகக் கீழ்க்காணும் ஹதீஸ் அமைகின்றது.

நபி (ஸல்) அவர்கள் ஃபாத்திமா பிந்த் அபீ ஹுபைஸ் அவர்களுக்கு நவின்றதாவது :

"...அது ஓர் இரத்த நாலத்திலிருந்தேயாகும். எனவே, உண்மையான மாதவிடாய் ஆரம்பமானால் தொழுகையை விட்டு விலகி நில்லுங்கள். பின்னர் அது (மாதவிடாய்) முடிவுற்றால், உங்கள் உடலில் (பட்டுவிட்ட) இரத்தம் நீங்கிவிடும்படி கழுவி (நன்கு குளித்து) உங்கள் தொழுகைகளை நிறைவேற்றுங்கள்."[55]

இங்கு நபி (ஸல்) அவர்கள் "உண்மையான மாதவிடாய் ஆரம்பமானால்" எனக் குறிப்பிடுவதன் மூலம் முஸ்தஹாதாஹ்வுடைய பெண்ணுக்குரிய சட்டங்கள் (ஓர் ஆரம்பமும் ஒருமுடிவுமுள்ள) மாதவிடாய் உண்டாகும் வாய்ப்புள்ள பெண்ணுக்கும் பொருந்துவனவாய் இருக்கும் என்பது தெளிவாகின்றது. எனினும், ஒரு பெண்ணுக்கு ஒழுங்கான முறையில் மாதவிடாய் உண்டாகும் வாய்ப்பு இல்லாத வரையில், அவளுக்கு வெளிவரும் இரத்தம் ஓர் இரத்த நாலத்திலிருந்து என்றாகி விடும்.

---

* இது தொடர்பாக முன்பக்கங்களில் விவரிக்கப்பட்டுள்ளது. பார்க்கவும்.

55. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol: 1, பக்: 183, ஹதீஸ் எண்: 303.

## முஸ்தஹாதாஹ் பற்றிய சட்டங்கள்.

முன்னர், எப்பொழுது பெண்ணுக்கு வெளியாகும் இரத்தத்தை மாதவிடாய் இரத்தம் என்றோ அல்லது *இஸ்திஹாதாஹ் சார்ந்த இரத்தம் என்றோ கருதுவது எனப் பார்த்தோம். மாதவிடாய்க்கும் இஸ்திஹாதாஹ்வுக்கும்* பொருந்தும் சட்டங்கள் அதனதன் நிலையில் வெளியாகும் இரத்தத்தின் தன்மையைப் பொறுத்து அமைகின்றது. மாதவிடாய்த் தொடர்பான சட்டங்களை முன்னர் பார்த்தோம். இஸ்திஹாதாஹ் சம்பந்தமான சட்டங்கள் கீழ்க்காண்பவர்களைத் தவிரவுள்ள சுத்தமான பெண்களுக்குப் பொருந்துவன போலவே பொருந்தும் தன்மை உடையனவாகும்.

1. முஸ்தஹாதாஹ்வுடைய பெண்கள் தமது ஒவ்வொரு தொழுகைக்காகவும் தனித்தனியாக வுளூஉ செய்வது கட்டாயக் கடமையாகும். ஃபாத்திமா பிந்த் அபீ ஹுபைஸ் அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் அவ்வாறுதான் கட்டளையிட்டார்கள். அவர்கள், "பின்னர் ஒவ்வொரு தொழுகைக்குமாக வுளூஉ செய்யுங்கள்."[56] என்றுதான் கட்டளை பிறப்பித்தார்கள். இதன் கருத்து என்னவெனில், குறிப்பிட்டதொரு தொழுகை நேரம் வந்தால் அந்தப் பெண் வுளூஉ செய்து கொள்ள வேண்டும், அதற்கு முன் (வுளூஉ செய்து கொள்வது) அல்ல என்பதாகும்.

2. அவள் வுளூஉ செய்து கொள்வதற்கு முன்னர் உடலிலுள்ள இரத்தக் கறைகளைக் கழுவிவிட வேண்டும். அத்துடன் அவளது மறைவான பகுதியில் ஒரு துணித் துண்டை வைத்துக் கொள்ள வேண்டும், அது அங்கு வெளியாகும் இரத்தத்தை உறிஞ்சி வைத்துக் கொள்ளும்.

நபி (ஸல்) அவர்கள் ஹம்னாஹ் பிந்த் ஜஹ்ஸ் அவர்களுக்கு நவின்றதாவது : "நீர் பருத்தித் துணியை பயன்படுத்துவது நல்லது என நான் ஆலோசனை கூறுகிறேன். அது இரத்தத்தை உறிஞ்சி எடுத்துக் கொள்ளும்;" அப்பொழுது அவள், "மிக அதிகமாக வருகின்றதே;" எனக் கூறினாள். "அவ்வாறாயின் (பெரிய அளவிலான) துணியை வையுங்கள்." என்றார் நபி (ஸல்) அவர்கள். "அப்பொழுதும் அதிகமாக வருகின்றதே!" எனக் கூறினாள் அந்தப் பெண். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள், "அவ்வாறாயின் 'தலஜ்ஜுமீ' செய்யுங்கள்" என்றார்கள். அதாவது, பெண்ணின் மறைவான இடத்திலிருந்து வரும் இரத்தத்தைக் கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ளும் வகையில் பருத்தித் துணியை வைத்து, அதை இருக்கமாகப் பிடித்துக் கொள்வதற்காக இடையைச் சுற்றி ஒரு பிடியை (பட்டியை) அணிந்து கொள்ள வேண்டும். அதன்பின் வெளிவரும் எதுவும் அவளுக்குத் தீங்காக மாட்டாது. ஃபாத்திமா பிந்த் ஹுபைஸ் அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்: "உமது சாதாரணமான மாதவிடாயின்போது தொழுகையிலிருந்து விலகி நில்லும். பின்னர் ஒவ்வொருதொழுகைக்குமாக கழுவி வுளூஉ செய்து கொண்டு தொழுகையை நிறைவேற்றும். அப்பொழுது இரத்தத் துளிகள் விரிப்பில் விழுந்தாலும் சரியே!"*

3 - உடலுறவு கொள்ளுதல் : இதற்கான அனுமதி பற்றி அறிஞர்கள் கருத்து முரண்பாடு கொண்டுள்ளார்கள். மிகச் சரியான கருத்து என்னவெனில், 'அது அனுமதிக்கப்பட்டதே' என்பதாகும். ஏனெனில்

---

56. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol: 1, பக்: 149, ஹதீஸ் எண்: 228

* இதனை இமாம் அஹ்மத், இப்னு மாஜாஹ் ஆகியோர் அறிவிக்கின்றார்கள்.

பல (பத்து அல்லது அதற்கு மேற்பட்ட) பெண்கள் நபி (ஸல்) அவர்கள் காலத்திலேயே 'இஸ்திஹாதாஹ்' உடையவர்களாக இருந்துள்ளனர். அப்படியிருந்தும் அல்லாஹ்வோ அவன் தூதர் அவர்களோ அந்தத் தம்பதிகள் உடலுறவு கொள்வதற்குத் தடை விதிக்கவில்லை.

உண்மையில் அல்லாஹ் இவ்வாறுதான் கூறுகின்றான் :

﴿ فَاعۡتَزِلُواْ النِسَآءَ فِي الْمَحِيضِ ﴾ [ البقرة ، الآية ٢٢٢ ]

*"மாதவிடாய்க் காலத்தில் பெண்களை விட்டு விலகி இருங்கள்."*

(அல் குர்ஆன் 2:222)

இதுதான் பெண்கள் மாதவிடாய் உண்டாகி இருக்கும்போது மாத்திரம் அவர்களுடன் உடலுறவு கொள்வது கட்டாயமாகத் தவிர்க்கப்பட வேண்டும் என்பதற்கான ஆதாரமாகும். இஸ்திஹாதாஹ்வின் போது பெண்களுக்குத் தொழுவதற்கு அனுமதிக்கப்பட்டுள்ளதால், அவர்களுடன் அந்த வேளையில் உடலுறவு கொள்வதிலும் எத்தகைய சிக்கலும் இல்லை. மாதவிடாய் உண்டாகி இருக்கும்போது உடலுறவு கொள்வதைத் தடுக்கும் வகையில் 'கியாஸ்'* (அனுமான) முறைப்படி முடிவுக்கு வருவது சரியல்ல. காரணம், இரண்டு சூழ்நிலைகளின் தன்மை ஒரே விதமானவையல்ல என்பதாகும். 'கியாஸ்' எனும் அனுமான முடிவுகள் எடுப்பதானது, மாறுபட்ட தன்மைகள் நிலைபெறும் பட்சத்தில் செல்லாததாகி விடுகின்றது.



* கியாஸ் என்பது என்ன என அறிந்து கொள்வதற்கு அடிக்குறிப்பு 15 ஐப் பார்க்கவும்.

6

# நி∴பாஸ் என்றால் என்ன?

நி∴பாஸ் : ஒரு கர்ப்பிணியின் பிரசவம் தொடர்பாக வெளிவரும் இரத்தத்தையே 'நி∴பாஸ்' எனக்கூறப்படும். இது பிரசவத்தின் போது வெளிவரலாம்; அல்லது பிரசவத்திற்கு பின்னர் வெளிவரலாம்; அல்லது பிரசவத்திற்கு முன் (இரண்டு மூன்று நாட்களுக்கு முன் பிரசவ வேதனையின் போது) வெளிவரவும் முடியும். சைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள், "ஒரு பெண்ணுக்கு கடுமையாக பிரசவ வேதனையுடன் இரத்தம் வெளிவரக் கண்டால் அது நி∴பாஸ் ஆகும். அது இரண்டு மூன்று நாட்களுக்கு என வரம்பிடப்படவில்லை. இந்தப் பிரசவ வேதனை பிரசவம் வரை நீடிக்கும்; அல்லாத பட்சத்தில் வெளிவந்த இரத்தம் நி∴பாஸுக்குறியது அல்ல" என்று கூறினார்கள்.

இது (நி∴பாஸ்) நீடித்து நிற்கும் காலம் தொடர்பாக ஏதும் வரம்புண்டா என்பதில் அறிஞர்கள் கருத்து முரண்படுகின்றனர். சைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: "நி∴பாஸைப் பொறுத்த வரையில் குறைந்த/கூடிய காலம் என்ற வரம்பில்லை. ஒரு பெண்ணுக்கு நாற்பது, அறுபது அல்லது எழுபது நாட்களுக்கு மேலாக இரத்தம் வரக் காண்கின்றாள்; பின்னர் அது நின்று விடுகின்றது. இவ்வாறு வெளிவரும் இரத்தம் நி∴பாஸுடையதாகும். சிலவேளை இவ்விரத்த வெளியேற்றம் தொடருமாயின் அப்பொழுது நி∴பாஸ் என்ற ரீதியில் அதற்கு நாற்பது நாட்களுடைய வரம்பு வைக்கப்படும். காரணம், இதுவே அதிகமான பெண்கள் காணும் சாதாரண கால எல்லையாகும்."

இந் நூல் ஆசிரியர் குறிப்பிடுவதாவது : "மேற்காண்பவற்றின் அடிப்படையில் ஒரு பெண்ணுக்கு நாற்பது நாட்களுக்கு மேல் இரத்தம் வெளிவருகின்றது என வைத்துக் கொள்வோம். அக்கட்டத்தில் (முன்னைய பிரசவங்கள் அல்லது வேறு அறிகுறிகளைக் கொண்டு) அவளது இரத்த வடிதல் நிற்பதற்கான அறிகுறிகள் இருந்தால், அவள் அது நிற்கும் வரை காத்திருக்க வேண்டும். ஒரு பெண் இத்தகைய அறிகுறிகள் எதுவுமே காணாத பட்சத்தில், அதிகமான பெண்களுக்குரியது போல் நாற்பது நாட்களைப் பூரணப்படுத்தி, (குளித்து) தன்னை சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். மறுபுறம், அந்த நாற்பது நாட்களையும் பூரணப் படுத்தியதைத் தொடர்ந்து அவளுக்கு மாதவிடாய் உண்டாகுமாயின் அது நிற்கும் வரை பொறுத்திருக்க வேண்டும். எனினும், அவளது வழக்கமான மாதவிடாய் காலத்தையும் கடந்து இரத்த வெளியேற்றம் இருக்குமாயின் அப்பொழுது அவள் 'முஸ்தஹாதாஹ்' என்று கருத வேண்டும். அதோடு இஸ்திஹாதாஹ்வுக்குரிய சட்டங்களையே அப்பொழுது அவள் பின்பற்ற வேண்டும்."

சிலவேளை, பொதுவாகக் கணிக்கப்பட்ட நாற்பது நாட்களுக்கு முன்னரே அவளது நி∴பாஸ் நின்று, சுத்தமுள்ளவளாகினால், உடன் குளித்து தொழுவதற்கும் நோன்பு நோற்பதற்கும் முடியும். அத்துடன் அவள் தன் கணவனுடன் உடலுறவு கொள்ளவும் முடியும். ஒரு நாளுக்கு குறைவாக அவளது இரத்தம் வெளிவருவது நிற்பதானது அவள் சுத்தமடைந்து விட்டால் எனற கருத்தைத் தரமாட்டாது. (இது அல் முஃனியில் குறிப்பிடப்பட்டுள்ள முறைக்கமையவேயாகும்)

ஒரு பெண் தெளிவான உடலமைப்பைக் கொண்ட மனித உருவை பெற்றெடுக்காத வரையில் அவளது நிஃபாஸை ஊர்ஜிதப் படுத்த முடியாது. ஒரு சிறு உடலைப் பெற்றெடுத்து அது நன்கு வளர்ச்சியடைந்த மனித உருவின் அமைப்பைத் தெளிவாகக் காட்டாத பட்சத்தில், அதனுடன் வெளிவந்த இரத்தத்தை நிஃபாஸ் எனக் கொள்ள முடியாது. மாறாக அது 'இர்க்' இரத்தம் (ஓர் இரத்த நாலத்திலிருந்து வெளிவந்த இரத்தம்) என்றே கொள்ள வேண்டும். ஒரு மனித உரு கருவில் உருவாகி வளர்ச்சியடைவதற்கு, அது கருத்தரித்த தினத்திலிருந்து மிகக் குறைந்தபட்சம் எண்பது நாட்கள் ஆகும்; கூடியபட்சம் தொண்ணூறு நாட்களாகும்.

அல் முஜீத் இப்னு தைமிய்யா[57] கூறுகிறார் : "சிலவேளை அவள் 80/90 நாட்களுக்கு முன்னர் கடும் வேதனையுடன் கலந்து இரத்தம் வரக் கண்டால் அதை கவனத்தில் கொள்ளவேண்டியது இல்லை. (அவள் தன்னை சுத்தப்படுத்திக் கொண்டு தொழுகையை நோன்பு நோற்பதை தொடர வேண்டும்.) ஆனால், இந்த கால எல்லைக்குப் பின்னர் இரத்தம் வெளிவரக் கண்டால் அவள் தொழுகை நோன்பு என்பவற்றிலிருந்து விலகி இருக்க வேண்டும். எவ்வாறாயினும் அவள் தனது குழந்தையைப் பிரசவித்து, அது வளர்ச்சியடைந்த மனித உருவின் அமைப்பைக் கொண்டிருந்தால் அப்பொழுது (80/90 நாட்களுக்கு முந்திய)அவளது இரத்தம் வெளிவரல் நிஃபாஸ் என்றே கருதி, அவளுக்கு விடுபட்ட தொழுகை, நோன்பு போன்றவற்றை ஈடு (களா) செய்ய வேண்டும். மறுபுறம், புதிதாகப் பிறந்த குழந்தை வளர்ச்சியடைந்த மனித உருவின் அமைப்பைக் காட்டாவிட்டால், அப்பொழுது அவளது இரத்த வெளிவரல் நிஃபாஸ் எனக் கருத முடியாது. விடுபட்ட தொழுகை நோன்பு போன்றவற்றிற்கு ஈடு (களா) செய்ய வேண்டியதும் இல்லை."

## நிஃபாஸுக்குரிய சட்டங்கள்

கீழ்க்காணும் நிலைகளைத் தவிர்த்து, நிஃபாஸுக்குரிய சட்டங்களாவன மாதவிடாய்க்கான சட்டங்களைப் போன்றேயுள்ளன.

1 - இத்தா நிஃபாஸுடன் தொடர்பு கொண்டதல்ல. எனினும் விவாகரத்து தொடர்பான சட்டங்களுடன் தொடர்புடையதாய் உள்ளது. உதாரணமாக : தலாக் (விவாகரத்து) பிரசவத்திற்கு முன்னர் அறிவிக்கப்பட்டால், இத்தா பிரசவத்துடன் முடிவடைகின்றது. அன்றி, அதற்கு நிஃபாஸுடைய காலத்துடன் எதுவிதத் தொடர்புமில்லை. சிலவேளை தலாக்கை பிரசவத்தின் பின்னால் அறிவித்தால், அவள் தனது மாதவிடாய் வரும்வரை காத்திருந்து அதற்கமைய முன்னர் விவரித்தபடி அவளது இத்தாவை கணிக்க வேண்டும்.

2 - 'ஈலாஃ' உடைய காலம். 'ஈலாஃ' என்பது ஒரு கணவன் காலவரையறையின்றி (அல்லது நான்கு மாதத்திற்கு மேல்) தனது மனைவியுடன் உடலுறவு கொள்வதில்லையென சத்தியம் செய்வதைக் குறிக்கும். இத்தகைய கட்டத்தில் குறித்த மனைவி உடலுறவு கொள்ள வேண்டும் என உரிமையுடன் கேட்பாளாயின், அக்கணவன் சத்தியம் செய்த நாளிலிருந்து நான்கு மாதங்கள் அதற்காக நிர்ணயிக்கப்படும். இக்கால எல்லை

57. அல்முஜீத் இப்னு தைமிய்யாஹ் என்பவர் இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களின் பாட்டனார் ஆவார். அவரும் சிறந்த மார்க்க அறிஞராவார்.

முடிவுற்ற பின்னர் (ஒரு முஸ்லிம் நீதிபதியால்) அவருடைய மனைவியுடன் உடலுறவு கொள்ளும்படியோ அல்லது அவருடைய மனைவி கோரி நிற்கும் பிரிவினையை நிறைவேற்றும்படியோ கட்டளையிடப்படுவார். நிஃபாஸுடைய காலத்தை ஈலாஃவுடைய காலத்திற்குரியதாகக் கணிக்கப்படமாட்டாது. எனவே, இக்கால எல்லைக்குள் மனைவிக்கு நிஃபாஸ் ஏற்பட்டால் அது சுத்தமாவதற்கு சமமான காலத்தைக் கணித்து ஈலாஃவுடைய காலத்துடன் சேர்க்கப்படும். இது மாதவிடாயிலிருந்தும் வித்தியாசமானது. அதனால், இதன் காலத்தை ஈலாஃவுடைய காலத்துடன் சேர்த்து கணிக்கப்படும்.

3 - பருவம் எய்தல் : நிஃபாஸ் கருத்தரித்தலுடன் சம்பந்தமானது என்பது தெளிவானது. ஒரு பெண்ணுக்குப் பாலியல் சார்ந்த ஒரு வகையான நீர் வெளிப்படும் தன்மை உருவாவதற்கு முன் கருத்தரித்தல் ஏற்பட மாட்டாது. (நிஃபாஸ் அல்ல) மாதவிடாய், பெண் பருவமெய்தியதை சுட்டிக்காட்டுவதாக இருக்கும்.

4 - சிலவேளை, 'நிஃபாஸுடைய இரத்தம் வெளியாவது நாற்பது நாட்கள் காலத்தினுள் நின்று, மீண்டும் நாற்பதாவது நாள் வெளிவருகின்றதெனில் அதை என்ன சொல்வது' என்ற வினா எழலாம். மாதவிடாய் இரத்தத்திற்கு வித்தியாசமான[58] விதத்தில் இவ்வாறு வெளியாகும் இது 'சந்தேகத்திற்குரியது' என்பது, ஹனபிலாஹ் அறிஞர்களின் பிரபலமான கூற்றுக்கள் அடிப்படையில் அமைந்ததாகும். அவர்களின் கருத்துக்களின்படி அவள் உரிய வேளையில் தொழுகை, நோன்பு ஆகிய கடமைகளை நிறைவேற்ற வேண்டும். கட்டாயக் கடமைகளைத் தவிர வேறு எவையெல்லாம் மாதவிடாய் உண்டான பெண்களுக்குத் தடை செய்யப்பட்டுள்ளனவோ அவை இவளுக்கும் தடையானவையே. மாதவிடாய் உண்டான பெண் எவற்றுக்கெல்லாம் ஈடு செய்கின்றாளோ அவற்றுக்கெல்லாம் இவளும் ஈடுசெய்தல் வேண்டும்.

இந்நூலின் ஆசிரியர் இவ்வாறு கருத்து கொண்டுள்ளார். "நிஃபாஸுடைய காலம் எனவுள்ள காலப் பகுதியில் மீண்டும் இரத்தம் வெளிப்படுமாயின் அது அவளுடைய நிஃபாஸ் சார்ந்த இரத்தமே. அவ்வாறு இல்லாவிட்டால் அது மாதவிடாய் இரத்தமே. எனினும் அது நிற்காது தொடர்ந்து வெளிவருமாயின் அப்பொழுது அது ஸ்திஹாதாஹ் இரத்தமேயாகும்." இது அல் முஃனி (Vol. 1, பக் : 349) யில் வரும் கருத்துக்கு மிக நெருக்கமானதாகும். இக்கிரந்தத்தில் இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் கூறியதாக பதிவு செய்யப்பட்டுள்ளதாவது "அவளுடைய இரத்தம் வெளிவருவது நின்று இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் மீண்டும் வரக்கண்டால் அது நிஃபாஸுடைய இரத்தமே; அல்லாவிட்டால் அது மாதவிடாயுடைய இரத்தமே." சைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களும் இக் கருத்தையே தேர்ந்தெடுத்துக் கொண்டுள்ளார்கள்.

உண்மையில், இரத்தத்தைப் பொறுத்தமட்டில் 'சந்தேகம்' என எதுவும் இருக்க முடியாது. என்றாலும், மக்களின் அறிவு, விளங்கும் தன்மை என்பவற்றின் அடிப்படையில் இது பற்றிய அவர்களது கருத்துக்களில் வேறுபாடுகள் தென்படுகின்றன. அல்லாஹ் அருளிய அல் குர்ஆனும், அவன் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களுடைய சுன்னாஹ்வுமே அனைத்து அம்சங்களுக்கும் விளக்கம் பெறவேண்டிய மூலங்களாகும்.

58. மாதவிடாய் இரத்தம் வெளிவருவது நின்று மீண்டும் வருமாயின் அது நிச்சயமாக மாதவிடாய் இரத்தமே. உதாரணமாக, ஒரு பெண் மாதாந்தம் எட்டு நாட்கள் மாதவிடாய் உடையவளாக இருக்கின்றாள். அவள் கூறுவதற்கொப்ப அவளது இரத்தம் வெளிவருவது நான்காம் நாளிலிருந்து இரண்டு நாட்களுக்கு நின்று விடுகின்றது. பின்னர் 7 ஆம் 8 ஆம் நாட்களில் மீண்டும் இரத்தம் வர ஆரம்பிக்கின்றது. இவ்வாறு மீண்டும் வெளிவரும் இரத்தம் நிச்சயமாக மாதவிடாய் இரத்தமேயாகும்.

நோன்பு, தவா∴ப் போன்ற கடமைகளை நிறைவேற்றும் பொழுது முதற் தடவையாக ஏதும் தவறுகள் நடந்தாலும் அவற்றை இருமுறை நிறைவேற்றும்படி அல்லாஹ் எவருக்கும் பணிக்கவில்லை. அதோடு, அவ்வாறு அவற்றை மீண்டும் நிறைவேற்றாமல் அவற்றில் நேர்ந்த பிழைகளை நிவர்த்தியாக்கவும் முடியாது.

எனினும், யாரேனும் ஒருவர் அவரது / அவளது சக்திக்குட்பட்ட வரையில் தமக்குத் கடமையான வணக்க வழிபாடுகளை மிக அழகாகவும், திருப்தியாகவும் நிறைவேற்றுவார்களாயின், அவர் / அவள் தமது பொறுப்பிலிருந்து விடுவிக்கப் படுவார்.

அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ لا يُكَلِّفُ اللهُ نَفْساً إلاَّ وُسْعَهَا ﴾ [ البقرة ، الآية ٢٨٦]

*"அல்லாஹ் எந்த மனிதரையும் அவரது சக்திக்கு அதிகமாக (பொறுப்புகளைச் சுமத்தி) சிரமப் படுத்துவது இல்லை."*

(அல் குர்ஆன் 2:286)

மீண்டும் அவன் கூறுகின்றான்:

﴿ فاتَّقُوا اللهَ مَا اسْتَطَعْتُمْ ﴾ [ التغابن، الآية ١٦]

*"எனவே, உங்களால் முடிந்த வரை அல்லாஹ்வுக்கு அஞ்சிய வண்ணம் வாழுங்கள்"*

(அல குர்ஆன் 64:16)

5 - நி∴பாஸுடைய காலம் எனக் கணிக்கப்பட்ட நாற்பது நாட்களில், குறித்த நாட்களுக்கு முன்னர் சுத்தமடைந்த ஒரு பெண்ணுடன் உடலுறவு கொள்வது பற்றிய கருத்தென்ன? மாதவிடாயைப் பொறுத்த வரையில் ஒரு பெண்ணின் வழமையான மாதவிடாய்க் கால எல்லைக்கு முன்னர் அவள் சுத்தமடைந்து விடுவாளாயின் அவளுடன் உடலுறவு கொள்வதற்கு அனுமதியுண்டு. நி∴பாஸைப் பொறுத்தவரையில் ஹன்பலி மத்ஹபின் தெளிவான கருத்துக்களின்படி உடலுறவு கொள்வது விரும்பப்படவில்லை.

இது தொடர்பான சரியான கருத்து என்னவெனில், இது விரும்பப் படவில்லை என்பதல்ல என்பதாகும். இதுவும் மிக அதிகமான முஸ்லிம் அறிஞர்களின் கருத்தாகும். ஏதாவதொன்று விரும்பப்படவில்லை என்பதற்கு இஸ்லாமிய சட்டத்திலிருந்து சான்று தேவைப்படுகிறன்து. எனினும் இது தொடர்பாக இமாம் அஹ்மத் அவர்கள் அறிவிக்கும் ஒரு விடயத்தைத் தவிர வேறு ஆதாரமில்லை.

அவர் அறிவிப்பதாவது :

"அபீ அல்ஆசின் மகன் உஸ்மானை அவரது மனைவி, தனது (நி∴பாஸின்) நாற்பது நாட்களுக்குரிய கால எல்லை முடிவடையும் முன்னர் நெருங்கினார். அப்பொழுது அவர் (கணவரான உஸ்மான்) "வேண்டாம்" என்றார்."

இந்நிகழ்வு அந்தப் பெண் செய்ததை அவர் விரும்பவில்லை எனபதை தெட்டத் தெளிவாகவும் வெளிப்படையாகவும் காட்டவில்லை. அவர் அவ்வாறு சொல்வதற்கு, அவள் நிஃபாஸிலிருந்து சுத்தமாகிவிட்டாளா இல்லையா என்பதை அறியாதிருக்கலாம் என நினைத்திருக்கலாம்; அல்லது அவளுடன் உடலுறவு கொள்வதால் மீண்டும் இரத்தம் வர ஆரம்பித்து விடலாம் என நினைத்திருக்கலாம்; அல்லது வேறு காரணங்களும் இருக்கலாம். அல்லாஹ் மிக அறிந்தவன்.



7

# மாதவிடாயைத் தடுத்தல்; கருத்தடை, கருச்சிதைவு செய்தல்!

மாதவிடாயைத் தடுப்பவற்றை இரண்டு நிபந்தனைகளுக்கமைய பயன்படுத்த அனுமதிக்கலாம் !

முதலாவது : பெண்ணுக்கு அதனால் தீங்கு வரக் கூடாது.
அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ ولا تُلقُوا بِأَيْدِيكُم إلى التَّهْلُكَة ﴾ [ البقرة ، الآية ١٩٥ ]

*"மேலும், உங்களுடைய கரங்களால் உங்களுக்கு அழிவைத் தேடிக் கொள்ளாதீர்கள்."*

(அல் குர்ஆன் 2:195)

மீண்டும் அருளுகின்றான் :

﴿ وَلاَ تَقْتُلُوا أَنفُسَكُمْ إِنَّ اللهَ كَانَ بِكُمْ رَحِيماً ﴾ [ النساء ، الآية ٢٩ ]

"உங்களை நீங்களே மாய்த்துக் கொள்ள வேண்டாம். திண்ணமாக அறிந்து கொள்ளுங்கள்: அல்லாஹ் உங்கள் மீது அளப்பரிய கருணை புரிபவனாக இருக்கின்றான்."

(அல் குர்ஆன் 4:29)

இரண்டாவது : சிலவேளை, மாதவிடாயைத் தடுப்பவற்றைப் பயன் படுத்துவதால் ஏதோ ஒரு வகையில் கணவரைப் பாதிக்குமாயின், அப்பொழுது அவரது அனுமதியைப் பெறுவது தலையாய அம்சமாகும். உதாரணமாக : ஒரு பெண் இத்தாவில் இருப்பதாக வைத்துக் கொள்வோம், அப்பொழுது அவளுக்கான செலவை கணவரே ஏற்பது கட்டாயம். இந்நிலையில் (மாதவிடாய்த் தடுப்புகளைப் பயன்படுத்தி) கணவரிடமிருந்து அதிகச் செலவுப் பணம் பெறும் நோக்குடன் இத்தாவை நீடிக்க அனுமதிக்கப்படுவதில்லை. மாறாக, அவள் அவரின் அனுமதியைப் பெற வேண்டும். அதேபோல், மாதவிடாய்த் தடுப்புக்களை பயன்படுத்துவதால் ஒரு பெண் கருத்தரிக்காது விடலாம் என்ற அச்சம் இருக்குமாயின், அப்பொழுதும் கணவரின் அனுமதியின்றி அத்தகைய தடுப்பு முறைகளைப் பயன்படுத்துவது அனுமதிக்கப்படக்கூடியது அல்ல.

எனவே, மேற்காணும் நிபந்தனைகளுக்கு அமைவாக அன்றி மாதவிடாய்த் தடுப்புக்களைப் பயன்படுத்தாது இருப்பது நல்லது. மேலும், இதற்கான உண்மையான தேவை இருக்குமாயின் பெண்ணின் ஆரோக்கியம், பாதுகாப்பு என்பன கருத்திற்கொண்டு முடிந்த அளவு இயற்கையான வழிமுறைகளை மேற்கொள்ளலாம்.

மாதவிடாய் உண்டாவதற்கான மருந்து உபயோகத்தை இரண்டு நிபந்தனைகளுக்கமையவே அனுமதிக்கப்படலாம்!

முதலாவது : இவ்வுபயோகத்தைத் தவறான முறைக்கு உபயோகப்படுத்தக் கூடாது; துஷ்பிரயோகிக்கக் கூடாது. உதாரணமாக : ஒரு பெண் தன் மீது கடமையான கட்டாய வணக்க வழிபாடுகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள இதனைப் பயன்படுத்தக் கூடாது. அதாவது ரமளான் மாதம் வருகிறது என வைத்துக் கொள்வோம். எனவே, அம்மாதத்தில் நோன்பு நோற்பது, தொழுவது போன்றவற்றிலிருந்து ஒதுங்கிக் கொள்ள நல்லதொரு சாதனமாக இதனைப் பயன்படுத்துவதைக் குறிப்பிடலாம். இது அறவே ஆகாத விஷயம்; தரப்பட்ட அனுமதியைத் துஷ்பிரயோகம் செய்வதாகும்.

இரண்டாவது : ஒரு பெண் மாதவிடாய் உண்டாகுவதற்கான மருந்து உபயோகிப்பதாக வைத்துக் கொள்வோம். அதனால் மாதவிடாய் உண்டாகி, அவளது கணவன் அவளுடன் முழு இன்பத்தையும் அனுபவிக்க அது குந்தகம் விளைவிக்குமானால் அப்பொழுது, அத்தகைய ஏதேனும் உபயோகிக்க அவள் தனது கணவனது அனுமதியைப் பெற்றாக வேண்டும். அதோடு, அவள் விவாகரத்து செய்யப்பட்டிருந்தால், இத்தகைய ஏதேனும் உபயோகிப்பதானது அவளது கணவன் அவளை நோக்கி வருவதற்குரிய உரிமையைத் துரிதமாக இழக்கச் செய்து விடும். காரணம், இத்தகைய ஏதேனும் உபயோகிப்பதன் மூலம் இத்தா துரிதமாக முடிவதாகும். இத்தாவுடைய கால எல்லையில் தன் மனைவியை நோக்கி மீண்டும் வரும் முறையிலான விவாகரத்து சொல்லப்பட்டிருந்தால், அதற்கமைய அக்கணவன் இத்தா முடிவடையமுன் தன் மனைவியிடம் வரும் உரிமையுண்டு.

கருத்தடை சாதனங்கள் பயன்படுத்துவதன் அவசியம்!

முதலாவது : கருத்தரிப்பை முற்றாகத் தடுப்பது. இதற்கு அனுமதியில்லை, ஏனென்றால்:

அ) இது முஸ்லிம்களின் பெருக்கத்தைக் குறைத்து விடும். இஸ்லாமிய ஷரீஆவின் நோக்கம் முஸ்லிம்களின் சனத்தொகை பெருக வேண்டும் என்பதே.

ஆ) ஒரு பெண் தனக்கிருக்கும் பிள்ளைகள் எல்லோரும் மரணமடையாது வாழ்வர் என்று உறுதி கூற முடியாது. இக்கட்டத்தில் அவள் நிரந்தர கருத்தடை செய்து பிள்ளைப் பெறுவதை தடை செய்து கொண்டால், அவளுக்கு பிள்ளைகளே இல்லாது மரணிக்க நேரிடலாம்.

இரண்டாவது : தற்காலிகமாக கருத்தரிப்பதைத் தடுப்பது : பலமுறை கருத்தரித்து ஒரு பெண், மீண்டும் கருத்தரித்தால் பலஹீனமடைவாள் என்றிருக்குமாயின் அக்கட்டத்திற்கு இது பொருந்துவதாக அமையும். மேலும், ஒரு பெண் தனது கருத்தரித்தலானது இரண்டு வருடத்திற்கு ஒரு முறையென ஒழுங்குபடுத்திக் கொள்ள நாடி, அவளது கணவனும் அனுமதியளித்தால், அதோடு கருத்தடை சாதனங்கள் அவளுக்கு தீங்கு இல்லை எனக் கண்டால், அக்கட்டத்தில் அப்படி ஏதும் பயன்படுத்த அனுமதிக்கப் படலாம். நபித்தோழர்கள் தமது விந்து பெண்ணை சென்றடைவதைத் தடை செய்தார்கள்[59] (இதை அரபியில் 'அஸ்ல் செய்தல்' எனக்

59. ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள். "நாம் நபி (ஸல்) அவர்கள் வாழ்ந்த காலத்தில் அஸ்ல் செய்வதை நடைமுறைப் படுத்தினோம்."

- ஆதாரம் : ஸஹீஹுல் புஹாரி, (அரபு - ஆங்கிலம்) Vol: 7, பக்: 102.

கூறுவார்கள்.). (நபி (ஸல்) அவர்கள்) இவர்கள் இப்படிச் செய்வதை 'வேண்டாம்' எனக் கூறவில்லை. ஒருவர் தன்னுடைய மனைவியுடன் உடலுறவு கொண்டு விந்து வரும் கட்டத்தில் தனது உறுப்பைப் பெண்ணுறுப்பிலிருந்து வெளியே எடுத்து விந்தை வெளியில் விடுவதையே இது குறிக்கும்.

கருச்சிதைவு செய்தல்: இது இருவகைப்படும்.

முதலாவது : ஒரு தாயின் கருப்பையில் உள்ளதை நீக்கிவிட நினைத்தல். (வயிற்றிலுள்ள) உடலுக்கு உயிரூட்டப்பட்டதைத்[60] தொடர்ந்து இவ்வாறு செய்ய திட்டமிட்டால், அது சட்டமுரணானது என்பதில் எத்தகைய சந்தேகமும் இல்லை. ஏனெனில், அது ஓர் உயிரைக் கொலைசெய்யும் கொடிய செயலாகும்.[61] இது குர்ஆன், சுன்னாஹ், இஜ்மாஉ ஆகியவைகளின் கருத்துக்களுக்கு அமைவானதாகும்.

சிலவேளை, வயிற்றிலுள்ள கருவிற்கு உயிர் ஊதப்படுமுன் கருச்சிதைவு செய்யப்படுமாயின் அதை சில அறிஞர்கள் 'ஆகும்' என அனுமதிக்கின்றனர்: வேறு சிலர் அனுமதிப்பதில்லை. சில அறிஞர்கள் அது 'அலக்கா' (இரத்தக் கட்டி) என்றிருக்கும் போது கருச்சிதைவு செய்ய அனுமதிக்கப்படலாம் என்று கூறுகின்றனர். அதாவது கருத்தரித்து நாற்பது நாட்களுக்குக் குறைவாக இருக்கும்போது அது அனுமதிக்கப் படலாம் என்பது அவர்கள் கருத்து. எனினும் மற்றும் சிலரின் கருத்துப்படி கரு மனித உருவின் அமைப்பைப் பெறாத நிலை வரை இது அனுமதிக்கப் படலாம் எனக் கூறுகின்றனர். எவ்வாறாயினும், நியாயமான காரணமின்றி கருவை சிதைக்காமல் இருப்பதில் கவனம் செலுத்துவது அவசியம். உதாரணமாக: ஒரு தாய் கருவை சுமந்திருக்க முடியாத அளவுக்கு சுகவீனமுற்று இருக்கின்றாளாயின், அவளது அந்தக் கரு மனித உருவின் அமைப்பைப்

---

60. அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்: "சத்தியமும் அதன்பால் உணர்வூட்டப் பட்டவருமான நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள் : (ஒரு விதைவையின் உருவில்) உங்களுள் ஒவ்வொருவரும் உங்கள் தாயின் கருப்பையில் நாற்பது நாட்கள் சேர்த்து வைக்கப்படுவீர்கள். பின்னர் அதற்கு சமமான (நாற்பது நாட்கள்) காலத்தில் ஓர் இரத்தக்கட்டியாக மாற்றப்படுவீர்கள். பின்னர் அதற்கு சமமான (நாற்பது நாட்கள்) காலத்தில் ஒரு சதைத் துண்டாக மாற்றப்படுவீர்கள். பின்னர் (உயிரை அதற்கு ஊதிவிடும்) ஒரு மலக்கை அல்லாஹ் அனுப்புவான்." இந்த ஹதீஸை முஸ்லிமிலும், புகாரியிலும் (Vol: 8, பக்: 387, ஹதீஸ் எண்: 593) "உயிரை அதற்கு யார் ஊதிவிடுகின்றாரோ" என்ற பகுதி முஸ்லிம் கிரந்தத்தில் பதிவாகியுள்ளது.

61. இதன் ஆசிரியர் இது பற்றி இன்னும் சில நூல்களில் குறிப்பிட்டுள்ளார். அவருடைய 'அல் ஃபதாவா அந்நிஸாஇய்யாஹ்' என்ற நூலின் 54,55 பக்கங்களில் குறிப்பிடுவதாவது. "இது ஒரு தடை செய்யப்பட்ட ஒரு செயல், 'இந்த சமுதாயம் பெருக வேண்டும்.' என்ற நபி (ஸல்) அவர்களது கருத்துக்கும் இது முரணானது. இது முஸ்லிம்களைப் பலவீனப்படுத்தி இழிவைக் கொண்டுவரும் காரணிகளுள் ஒன்றாகும். முஸ்லிம்களின் எண்ணிக்கை கூடும்போது அவர்கள் வலிமையடைவர், அதனால்தான் அல்லாஹ் இஸ்ராயிலிய மக்களை நோக்கி இவ்வாறு பேசினான்:

﴿ وأمددناكم بأموال وبنين وجعلناكم أكثر نفيرا ﴾[ الإسراء ، الآية ٦ ]

"மேலும், பொருட் செல்வங்கள், மக்கள் செல்வங்கள் மூலம் உங்களுக்கு உதவி செய்தோம். உங்கள் எண்ணிக்கையை முன்பைவிடப் பெருகச் செய்தோம்."

(அல் குர்ஆன் 17:6)

நபி ஷுஐப் (அலை) அவர்கள் தமது மக்களுக்கு இவ்வாறு நினைவூட்டினார்கள் :

﴿ واذكروا إذ كنتم قليلا فكثركم ﴾ [ الأعراف ، الآية ٨٦ ]

"நீங்கள் எண்ணிக்கையில் குறைவாக இருந்த நேரத்தை நினைத்துப் பாருங்கள். பிறகு அல்லாஹ் உங்களைப் பெருகச் செய்தான்."

(அல் குர்ஆன் 7:86)

"எண்ணிக்கையில் மிக அதிக மக்களைக் கொண்ட சமுகம் தனது சுய தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள முடிகின்ற அதேவேளை, அதனைக் கொண்டு எதிரிகளும் அச்சமுறுவர் என்பது அறிந்துகொள்ளவேண்டிய அம்சமாகும். எனவே, நியாயமான காரணமின்றி பிள்ளை பெறும் வாய்ப்பை அழிப்பது அனுமதிக்கப்படக் கூடியதல்ல. உதாரணமாக : ஒரு பெண் கருத்தரிப்பது அவளது உயிருக்கு ஆபத்தாயின் அல்லது அவளது கருப்பையை பயங்கரமான நோய் ஒன்று தாக்கி, அது அவளது உடலில் பரவி அவள் அழிந்துவிடும் ஆபத்து இருக்குமாயின் அன்றி பிள்ளை பெறும் வாய்ப்பை இழந்துவிடக்கூடாது."

பெற்றில்லாவிட்டால் அதை சிதைப்பது அனுமதிக்கப்படலாம். அல்லாஹ் மிக அறிந்தவன்.

**இரண்டாவது : கருவை அழிக்கும் எண்ணம் இல்லாமை.**

ஒரு பெண் கர்ப்பிணியாகி அதன் கடைசி வேளையில், பிரசவத்தின் போது, தாய்க்கும் அவளது புதிய ஜீவனுக்கும் ஏதேனும் தீங்கு ஏற்படாதவாறும், அதோடு இரண சிகிச்சைக்கான தேவை இல்லாதபோதும் மிகக் கவனமாகக் காரியமாற்றுவது அனுமதிக்கப் பட்டுள்ளது. சில வேளை இரண சிகிச்சை அவசியமாகிவிட்டால் அதற்கான நான்கு வழி முறைகள் கவனத்தில் கொள்ளப்பட வேண்டும்.

*அ) தாயும் சேயும் உயிருடன் இருக்கும் போது* : இத்தகைய கட்டத்தில் உண்மையிலேயே இரண சிகிச்சையின் அவசியம் இருந்தால் மட்டும் அது அனுமதிக்கப்பட முடியும். உதாரணமாக: பிள்ளையைப் பெற்றெடுப்பதில் சிக்கல்கள் ஏதும் இருந்தால் இதற்கு அனுமதிக்கலாம். காரணம்: உடல் ஓர் அமானம்; ஒரு நம்பிக்கைச் சொத்து. எனவே, ஒரு பெரும் பயன் இல்லாது ஓர் ஆபத்தான நிலைமைக்கு வழியமைத்து விடக்கூடாது.

*ஆ) தாயும் சேயும் இறந்திருக்கும் போது* : இந்நிலையில் இரண சிகிச்சை அனுமதிக்கப்படக் கூடியதல்ல. ஏனெனில், அதனால் எத்தகைய பயனும் இல்லை.

*இ) தாய் உயிருடன் இருக்க, சேய் இறந்தபோது* : (தாய்க்கு ஏதும் ஆபத்து நேரும் என்ற அச்சம் இல்லாவிட்டால்) இறந்திருக்கும் சுமையை அகற்றவென இரண சிகிச்சை செய்ய அனுமதியுண்டு. இறந்த சுமையை இரண சிகிச்சை செய்யாது அகற்ற முடியாது என்பது தெளிவானதே; அல்லாஹ் மிக அறிந்தவன். அது தாயின் கருப்பையில் இருந்தால், அவளுடைய எதிர்கால பிரசவங்களுக்குக் குந்தகம் விளைவிக்கலாம்; சகிக்க முடியாத கஷ்டங்களைத் தரலாம். அதோடு, அவளது முந்திய கணவனிடமிருந்து விவாகரத்து பெற்று இத்தாவில் இருக்கும் பொழுது அந்நிலை அவளை ஒருவிதவையாகவே வைத்து விடலாம். எனவே, இறந்த சுமையை இரண சிகிச்சை மூலம் அகற்றுவது அனுமதிக்கக் கூடியதே.

*ஈ) தாய் இறந்து சேய் உயிருடன் இருக்கும் போது*: சிலவேளை பிள்ளை உயிருடன் இருக்க மாட்டாது என்ற முடிவுக்கு வந்தால், அப்பொழுது அதனை அவளிடமிருந்து அகற்றுவது அனுமதிக்கப்படக்கூடியது அல்ல. ஆனால், பிள்ளை உயிருடன் இருக்கும் என அறிந்து கொண்டால், அதன் சில பகுதிகள் வெளிவந்திருந்தால் - அப்பொழுது இரண சிகிச்சை மூலம் அப்பிரசவத்தை பூர்த்தி செய்து பிள்ளையை எடுத்துக்கொள்வது அனுமதிக்கப் படமுடியும். மறுபுறம் பிள்ளையின் பகுதிகள் எதுவும் வெளிவராத கட்டத்தில் இரண சிகிச்சை செய்து பிள்ளையயை வெளியே எடுப்பது தொடர்பாக சில சட்ட நிபுணர்களின் கருத்து என்னவெனில், 'அது உடலை உருக்குலைத்தல், அங்கவீனமாக்குதல்' என்பதாகும்.

இது தொடர்பான சரியான கருத்து என்னவெனில், தாயின் வயிற்றை இரண சிகிச்சை மூலம் திறந்து உள்ளேயுள்ள பிள்ளையை வெளியே எடுக்க அனுமதிக்க முடியும் என்பதே. குறிப்பாக, வேறு வழியே இல்லாத கட்டத்தில், வயிற்றைத் திறந்து மீண்டும் முன்பிருந்தது போல் அதைத் தைத்து விடும் அளவுக்கு இரண சிகிச்சை வைத்திய முறை வளர்ந்து விட்ட இக்காலத்தில் இதை அனுமதிக்க முடியும்.மேலும் இறந்து விட்ட ஒருவரை விடவும் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒருவரை பாதுகாப்பது மிகவும் உயர்ந்ததொரு விடயம்

என்பதால், தவறே செய்யாத (பாபமற்ற) ஓர் உயிரைப் பாதுகாப்பது கடமை எனக் கொள்ள வேண்டியது அவசியமானதோர் அம்சமாகும். புதிய ஜீவன் பாவங்களிலிருந்து தூய்மையானதே. அல்லாஹ் மிக அறிந்தவன்.

ஓர் எச்சரிக்கை : கருச்சிதைவு செய்வதற்கு அனுமதிக்கப்படக் கூடிய எல்லா கட்டங்களிலும் (குழந்தையின்) தந்தையின் அனுமதியைப் பெறுவது அவசியமாகும். இது தொடர்பாக நான் (கலாநிதி ஸாலிஹ்) செய்க் முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உதைமீன் அவர்களை சென்ற ஹிஜ்ரி 1413 முஹர்ரம் 17ஆம் திகதி வெள்ளிக்கிழமை (1992 ஜூலை 17ஆம் திகதி) சந்தித்து, "சிலவேளை ஒரு கர்ப்பிணிக்கு கருச்சிதைவு செய்வதன் நியாயமான தேவை இருந்தும், தந்தையின் அனுமதியைப் பெறுவது சாத்தியமில்லை என்றிருந்தால், அப்போது அவள் கருச்சிதைவு செய்து கொள்ள முடியுமா?" எனக் கேட்டேன். செய்க் அவர்கள், "இக்கட்டத்தில் 'தேவை' என்பதானது 'அனுமதி பெற வேண்டும்' என்பதனை மீறி நிற்கின்றது!" என பதிலளித்தார்கள்.

## இறுதியில் சில குறிப்புகள்...

நான் எடுத்துக் கொண்ட தலைப்பிலான என் கருத்துக்களை உங்கள்முன் சமர்ப்பித்து விட்டேன். இங்கு நான், இது தொடர்பான அடிப்படை அம்சங்களை மட்டுமே முன்வைத்துள்ளேன். உண்மையில் பெண்கள் அனுபவித்து வரும் துன்பங்கள் பலவற்றை நோக்கும் பொழுது அவை கரையில்லாத கடலளவு விசாலமானவையாகும். எவரும் நன்னோக்கோடு இந்த அடிப்படைகளுக்கான விளக்கங்களை அணுகி, விளங்கி மிகச் சிறந்த நியாயமான முடிவுகளைப் பெறமுடியும் என்பது எனது நம்பிக்கையாகும்.

ஒரு முஃப்தி,* தான் அல்லாஹ்வினதும் அவன் தூதரினதும் கட்டளைகளை எடுத்து வைக்கும் ஒருவர் மட்டுமே என்பதை நன்கு புரிந்து கொள்ள வேண்டும்; அவர் அல்லாஹ்வின் கிரந்தத்தை (குர்ஆனை)யும், நபி (ஸல்) அவர்களது சுன்னாஹ்வையும் பின்பற்றும் பொறுப்பும் கடமையும் உள்ளவர்; அல்குர்ஆனுடனும் நபிகளாரின் சுன்னாஹ்வுடனும் இணங்கி வராத எவையாயினும் அவை பிழையானவை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்; அத்தகைய பிழையானவற்றை நடைமுறை படுத்தவோ பின்பற்றவோ கூடாது - அவற்றைத் தனது இஜ்திஹாத் ** தொடர்பாக மன்னிக்கப் படக்கூடிய ஒரு முஜ்தஹித் *** முன்வைத்தாலும் சரியே. ஓர் அம்சம் தொடர்பான குறிப்பிட்டதோர் இஜ்திஹாத் பிழையானது என யாரேனும் அறிந்துகொண்டால், அதை அவர் ஏற்றுக்கொள்ளக்கூடாது.

ஒரு முஃப்தி தனது எண்ணத்தை, சிந்தனையை அல்லாஹ்வுக்கென தூய்மையாக வைத்துக்கொள்வது கடமையாகும். அதோடு, எவை மிகச் சரியானவையோ அவைகளையொட்டி உறுதியாக நிற்கவும், அவற்றின்பால் வழிநடத்தப்படவும் அல்லாஹ்வுடைய உதவியையும் ஒத்தாசையையும் வேண்டி நிற்க வேண்டும்.

அல் குர்ஆனிலும் நபி (ஸல்) அவர்களுடைய சுன்னாஹ்விலும் உள்ளவற்றையொட்டி அவர் (முஃ

---

* முஃப்தி : இஸ்லாமிய சட்டங்களை எடுத்துரைக்கும் இஸ்லாமிய அறிஞர்.

** இஜ்திஹாத் : அடிக் குறிப்பு எண் 16 ஐப் பார்க்கவும்.

*** முஜ்தஹித் : இஜ்திஹாத் முறைக்கமைய மார்க்க முடிவுகள் எடுப்பவர்.

ப்தி) சிந்திப்பதும், ஆராய்வதும், நன்கு விளங்கிக்கொள்ள முயல்வதும் மிக மிக அவசியம். அத்துடன், இஸ்லாமிய அறிஞர்கள் வழங்கிய விளக்கங்களை தேடிப்படிப்பதுடன் அவற்றை விளங்கிக்கொள்ள ஆவன செய்வதும் தவிர்க்கக் கூடாத தேவையாகும்.

பல்வேறு கட்டங்களில் உருவாகும் நிலைமைகளைப் பொறுத்து சம்பந்தப்பட்டவர்கள் அறிஞர்களின் கருத்துக்களைத் தேடிச் செல்கின்றனர். எனினும், அவர்களது உள்ளங்கள் திருப்தியடையாத முடிவுகளையே அவர்கள் பெறுகின்றனர்; அல்லது எதுவுமே பெறாதவர்களாகி விடுகின்றனர். இக்கட்டத்தில் அவர்கள் தமது தூய எண்ணம், அறிவு, விளங்கும்தன்மை ஆகியவற்றில் நம்பிக்கை வைத்து தமது தேவைக்கு அல்குர்ஆனையும் நபிகளாரின் சுன்னாஹ்வையும் அணுகினால், அவரோ / அவளோ தெளிவானதும் மிக நெருக்கமானதுமான தீர்வுகளின்பால் வருவது திண்ணம்.

ஒரு முஃப்தி கவனத்தில் கொள்ள வேண்டிய முக்கியமானதோர் அம்சம் என்னவெனில், அவர் ஏதாவதொரு விடயத்தில் மார்க்கத் தீர்ப்பு வழங்க அவசரப்படக் கூடாது. ஒரு பிரச்சினை வந்துற்றபோது அது பற்றி தெளிவாக விளங்கிக் கொள்வதும் ஆராய்வதும் அவசியம். பின்னர் அது தொடர்பாகத் தீர்ப்பு வழங்குவதற்கு முஃதியொருவர் அவசரப்படக் கூடாது. ஏனெனில், அதனால் பிழையான தீர்ப்பினை வழங்கி, அதன் விளைவுகள் காரணமாக பின்னர் வருந்த நேரிடலாம்.

ஒரு குறிப்பிட்ட முஃப்தியிடம் எடுத்துச் செல்லும் தமது விவகாரங்கள் தொடர்பாக அவர் தகுந்த இடம் வழங்கி மிகுந்த கவனம் செலுத்துவதாகக் காணும் மக்கள், அவரில் அபார நம்பிக்கை வைப்பர்; அவரது தீர்ப்புக்களை ஆர்வத்துடன் கருத்தில் கொள்வர். அவ்வாறு இல்லாது தீர்ப்பு வழங்குவதில் அவர் அவசரப்பட்டால்; அவர் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கை இழக்கப்பட்டுவிடும். அதனால் அவர் தன்னைத் தானே தாழ்த்திக் கொள்ளும் நிலை உருவாவதுடன் மற்றார் அவரது அறிவிலிருந்து பயன் பெறவும் முடியாது போய்விடும்.

கண்ணியமும் உயர்வும் உடைய அல்லாஹ்விடம் எம்மையும் எமது முஸ்லிம் சகோதர, சகோதரிகளையும் நேரிய வழியில் நடத்துமாறு நான் பிரார்த்தனைப் புரிகின்றேன். மேலும், அவனுடைய பாதுகாப்பை எமக்குத் தருவதுடன், எம்மைத் தீயன பாபமான செயல்களில் ஈடுபடுவதிலிருந்தும் காத்தருளும்படி வேண்டுகிறேன். அவன் தாராளத் தன்மையும், வேண்டி நிற்கும் போது தருபவனும் ஆவான்.

அல்லாஹ் தனது ஸலாத்தையும் ஸலாமையும் கருணை நபி (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தார்கள், தோழர்கள் மீதும் பொழிவானாக. புகழனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே உரித்து; அவனே இந்த நற்செயல்களைப் புரிவதற்குக் கருணையுடன் அருள் புரிந்தவனாவான்.

அல்லாஹ்வின் முன்னிலையில் ஏழ்மையின் நிலையிலிருக்கும் முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உதைமீன் ஆகிய நான், ஹிஜ்ரி 1392 ஷஃபான் மாதம் 14ஆம் திகதி வெள்ளிக்கிழமை இப்பணியை நிறைவு செய்தேன்.

அல்ஹம்துலில்லாஹ்



# 8

# வினா – விடைகள்!

இந்நூலில் உள்ள சில அம்சங்கள் தொடர்பாக செய்க் முஹம்மத் பின் ஸாலிஹ் அல் உதைமீன் அவர்களிடம் விடுக்கப்பட்ட வினாக்களும், அவற்றிற்கு அவர் தந்த அறிவார்ந்த விடைகளும் இங்கு தொகுத்துத் தரப்படுகின்றன. இவற்றைப் படித்து, சிந்தித்து, விளங்கி பயனடைவது நன்று.

## மாதவிடாய்த் தடுப்புச் சாதனங்கள்.

**வினா –1 :**

***ரமளான் மாதத்தில் மாதவிடாய்த் தடுப்பு மாத்திரைகள் உட்கொள்வது பற்றிய மார்க்கத் தீர்ப்பு என்ன?***

**விடை :**

அந்த மாத்திரைகள் உட்கொள்வதை, தீங்குகள் எதுவும் இல்லை எனும் வரையிலும், அவை உட்கொள்வதற்குக் கணவனின் அனுமதி இருக்கும் வரையிலும் அனுமதிக்கப் படமுடியும். எவ்வாறாயினும், என் அறிவுக்கு எட்டிய வரையில் இத்தகையவை பெண்ணுக்குத் தீங்கு விளைவிக்கவே முடியும். குறிப்பாக, ஓர் இயற்கை ஒழுங்கின்படி மாதவிடாய் மூலம் இரத்தம் வெளிவருகின்றது என்பதை அறிந்துள்ள நிலையில் இவ்வாறு இந்த இயற்கைக்கு எதிராக செயற்பட்டு அதைத் தடைசெய்வது தீங்கை வருவிப்பதாகும். அத்துடன் இத்தகைய மாத்திரைகள் உட்கொள்வதால் பெண்ணினது மாதவிடாய்க் கால ஒழுங்கில் பாதகம் ஏற்படலாம்; அதனால் அவளது தொழுகையை உரிய வேளையில் நிறைவேற்றுவதில் சந்தேகமும் சிக்கலும் தோன்ற முடியும்; அத்துடன் அவளது கணவனுடன் உடலுறவு கொள்வதற்கு முடியுமா? அல்லது முடியாதா? என்ற மனச்சிக்களையும் உருவாக்கிவிட முடியும். எனவே, இவற்றிற்காகவும் இன்னும் சில காரணிகளுக்காகவும் இந்த மாத்திரைகள் உட்கொள்வது சட்ட முரணானது எனக் கூற எனக்கு முடியாவிட்டாலும், நான் அதை விரும்பவில்லை; அதனால் அதை எவரும் உட்கொள்ள ஊக்குவிப்பதுமில்லை.

நான் கூறுவது என்னவென்றால், பெண்கள், தமக்காக அல்லாஹ் விதித்துள்ளவற்றை மனமுவந்து ஏற்க வேண்டும். அத்துடன், நபி (ஸல்) அவர்கள் தனது துணைவியான ஆயிஷா (ரலி) அவர்கள் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தபின் மாதவிடாய் உண்டான போது நவின்றதை நினைத்துப் பார்க்க வேண்டும். நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள், "ஆயிஷாவே! உங்களுக்கு மாதவிடாய் உண்டாயிற்றா?" ஆயிஷா (ரலி) அவர்கள், "ஆமாம்" என்றார்கள். அப்பொழுது "இதுதான் ஆதமுடைய அனைத்துப் பெண்களுக்கும் அல்லாஹ் விதித்துள்ள விடயமாகும்" என நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள்."[62]

---

62. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol. 1, பக். 182.

எனவே, பெண்கள் பொறுமையாக இருந்து அல்லாஹ்வின் வெகுமதிகளைப் பெற்றுக்கொள்ள முயல வேண்டும். *சிலவேளை*, ஒரு பெண்ணுக்கு உண்டாகும் மாதவிடாய் காரணமாக தொழுவதற்கோ நோன்பு நோற்பதற்கோ முடியாதிருப்பின், அக்கட்டத்தில் அல்லாஹ்வைப் புகழ்வது, தான தருமங்கள் செய்வது, மக்களுக்கு நன்மை புரிவது போன்ற நற்காரியங்களுக்கான கதவு திறக்கப்பட்டேயுள்ளது. இவற்றைச் செய்யலாம். இவை அல்லாஹ்வின் உவப்புக்குரிய அழகிய நற்காரியங்களாகும்.

## மாதவிடாயிலிருந்து தூய்மையாதல்

வினா - 2 :

*ஒரு பெண் மணமுடித்து இரண்டு மாதங்களுக்குப்பின், அவள் மாதவிடாயிலிருந்து நன்கு சுத்தமான பின்னர் சிறுதுளி இரத்தம் வரக்காண்கின்றாள். இத்தகைய நிலையில் அவளுக்கு தொழுவதற்கும் நோன்பு நோற்பதற்கும் அனுமதிக்க முடியுமா? அல்லது அவள் என்ன செய்யலாம்?*

விடை :

பெண்களின் மாதவிடாய், மணம் புரிவது தொடர்பாக அவர்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகள் கரையில்லாக் கடல் அளவு விசாலமானதாகும். அவற்றுள் சில மாதவிடாய்த் தடுப்பு மாத்திரைகள் உட்கொள்வதாலும், கருத்தடை மாத்திரைகள் உட்கொள்வதாலும் விளைவனவாகும். முந்தைய மக்கள் தற்போதுள்ள பல பிரச்சினைகளை தம் வாழ்வில் சந்தித்ததில்லை. இன்றைய நிலை மிகவும் வருந்தத் தக்கது.

நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய பொதுவான சட்டம் என்னவென்றால், மாதவிடாயுற்ற ஒரு பெண் அதிலிருந்து சுத்தமாகிவிட்டதற்கான தெளிவான அறிகுறிகளைக் கண்டால், அப்பொழுது 'அவள் சுத்தமானவள்' என்பதாகும். இது விடயத்தில் 'வெள்ளை வருவது' பற்றி பெண்கள் அறிவர். ஒரு பெண் சுத்தமான பின் வெளிவரும் மஞ்சள் நிறத்தன்மையுடைய திரவமோ, ஈரத் திரவமோ துளிகளோ மாதவிடாய்த் தொடர்பானவை அல்ல. எனவே, அப்பெண் தொழுவது, நோன்பு நோற்பது, தனது கணவனுடன் உடலுறவு கொள்வது என்பவற்றை அவை தடை செய்யாது. உம்மு அதிய்யா (ரலி) அவர்கள் கூறினார்கள்: "நாம் மஞ்சள் நிறத் தன்மையில்வெளியாகும் திரவத்தை முக்கியமான ஒன்றாக ஒரு போதும் கருதியது இல்லை" என்று, (இந்த ஹதீஸ் புகாரி கிரந்தத்தில் பதிவாகியுள்ளது) அபூதாவுத் ஹதீஸ் கிரந்தத்தில் "சுத்தமான பின்"[63] எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. (இதன் கருத்து மாதவிடாயிலிருந்து சுத்தமான பின் வெளியாகுபவை மாதவிடாய் சார்ந்தன எனக் கருதப்படுவது இல்லை என்பதாகும்.)

ஓர் எச்சரிக்கை; பெண்கள், தாம் நிச்சயமாக சுத்தமாக இருப்பதாக அறிந்து கொள்வதற்கு முன் எது விடயத்திலும் அவசரப்படக் கூடாது. சில பெண்கள் மாதவிடாய் உண்டாகிய பின் அது சற்று காய்ந்துவிட்டால் போதும், குளிப்பதற்கு விரைந்து விடுவார்கள். அன்றி, தாம் மாதவிடாயிலிருந்து நன்றாக சுத்தமாகிவிட்டோமா என்பதை நிச்சயப்படுத்திக் கொள்வது இல்லை. நபித் தோழர்களின் மனைவியர் மாதவிடாயுற்ற போது தமது மறைவிடத்தில் வைக்கும் பருத்தித் துணி வைப்பை (Pad) அன்னை ஆயிஷா (ரலி) அவர்களுக்கு அனுப்பி விளக்கம் கேட்டு நிற்பார்கள். அப்பொழுது "வெள்ளைத் திரவம் வெளியாவதைக்

---

63. அறிவிப்பாளர்கள் வரிசை சிறப்பானதே.

காணும் வரை (மாதவிடாயிலிருந்து சுத்தமாகிவிட்டதாக முடிவு செய்ய) அவசரப்படவேண்டாம்" என அறிவுரை பகர்வார்கள் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்.

**வினா - 3 :**

*ஈரமாக வெளியாகும் திரவம் பற்றி என்ன கூறுகிறீர்கள்? அது சுத்தமானதா அல்லது அசுத்தமானதா?*

**விடை :**

இஸ்லாமிய அறிஞர்களின் கூற்றுப்படி நாம் அறிந்து வைத்துள்ளதாவது, ஆண் பெண் சகலரதும் மறைவான பகுதிகளிலிருந்தும் மலக்குடலிலிருந்தும் வெளிவருபவைகளுள் விந்தைத் தவிரவுள்ள எல்லாமே அசுத்தமானவை; விந்து மட்டுமே சுத்தமானது. எனவே, பெண்களிடமிருந்து எவை வெளியாகின்றதோ அவை அசுத்தமானவை. அப்பொழுது வுழூஉ செய்வது அவசியம். இது தொடர்பாக வேறு சில அறிஞர்களுடன் நான் கலந்துரையாடிய பின் என்னால் வரமுடிந்த முடிவு இதுவாகும். இருந்தாலும் என்னைப் பொறுத்தமட்டில் இது தொடர்பாக ஒரு பிரச்சினையான நிலை இருக்கவே செய்கின்றது. அதாவது சில பெண்களுக்கு இத்தகையவை வெளிவருவது தொடராக இருக்கின்றது. இத்தன்மையைத் தொடர்ந்தாற் போல் சிறு நீர் வெளியாகும் ஒருவரின் தன்மையுடன் ஒப்பு நோக்கி, தொழுகைக்குரிய வேளை வந்தால் சம்பந்தப்பட்டவர் வுழூஉ செய்து கொள்வதையே தீர்வாகக் கொள்ளலாம். இதுபற்றி நான் சில மருத்துவர்களுடன் கதைத்தேன். அதற்கமைய நான் சொல்வதாவது: 'இவ்வாறு வெளியாகுபவை சிறுநீர்ப்பையிலிருந்து வெளியாகுமாயின் நான் மேலே தந்துள்ள தீர்வு அதற்குறியதாக அமையும். சிலவேளை, அவ்வாறு வெளியாகுபவை பிள்ளை பிறக்குமிடத்திலிருந்து வருமாயின் அதற்காக வுழூஉ செய்வது உரிய பரிகாரமாக அமையும். ஆனால் வெளியாகுபவை தூய்மையானவை - சுத்தமானவையாயின் அத்தகையவைபட்டுவிட்ட உடைகளைக் கழுவுவது அவசியமில்லை.

**வினா - 4 :**

*நிஃபாஸுடையவளாக இருக்கும் ஒரு பெண் நாற்பது நாட்களுக்கு முன்னர் தொழுகையையோ நோன்பையோ நிறைவேற்ற முடியுமாயிருந்தும் குறிப்பிட்ட அந்நாட்கள் பூர்த்தியாகும் வரை காத்திருக்க வேண்டுமா? அல்லது அவளது இரத்தம் வெளியாவது நின்று, சுத்தமாகிவிட்ட எக்கட்டத்திலும் இவ்வணக்க வழிபாடுகளை நிறைவேற்ற முடியுமா?*

**விடை :**

நிஃபாஸுடைய ஒரு பெண்ணுக்கு குறிக்கப்பட்ட கால எல்லையொன்று இல்லை. அவள் நிஃபாஸுடைய இரத்தத்தைக் கண்டு கொண்டு இருக்கும் வரையிலும் தொழுகை, நோன்பு, தனது கணவனுடன் உடலுறவு கொள்ளுதல் என்பனவற்றிலிருந்து ஒதுங்கி இருக்க வேண்டும். அவள் குறிப்பிட்ட நாற்பது நாட்களுக்கு முன்னர் (சிலவேளை 10வது அல்லது 15வது நாளில்) சுத்தமாகிவிட்டால், அதன் பின் மேற்காணும் அனைத்து வணக்க வழிபாடுகளிலும் சிறப்பாக ஈடுபடுவதுடன், அவள் தனது கணவனுடன் உடலுறவு கொள்ளவும் முடியும்.

நிஃபாஸ் என்பது உடற்கூறு சம்பந்தப்பட்ட ஒரு விடயம். நிஃபாஸுக்குரிய சட்டங்கள் நிஃபாஸ் தொடர்பான இரத்தம் இருக்கின்றது அல்லது இல்லாதிருக்கின்றது என்பதைப் பொறுத்து பிரயோகிக்கப் படுகின்றது. எவ்வாறாயினும், அறுபது நாட்களுக்கு மேல் ஒரு பெண்ணுக்குத் தொடராக இரத்தம் வெளியாகுமாயின், அப்பொழுது அவள் இஸ்திஹாதாஹ் என்ற நிலைக்கு ஆளாகின்றாள். இந்நிலையில், நாற்பது நாட்களுள்

சாதாரன நாட்களை வழமையான மாதவிடாய் நாட்களாகக் கருதி, அந்நாட்களில் தொழுகை, நோன்பு, தனது கணவனுடன் உடலுறவு கொள்ளுதல் ஆகியவற்றைத் தவிர்க்க வேண்டும். அந்நாற்பது நாட்களின் முடிவில் அவள் இஸ்திஹாதாஹ் என்ற நிலையில் இருப்பதாகக் கருதி, குளித்துவிட்டு தொழுகையை நிறைவேற்ற வேண்டும். *

## இரத்தக் கசிவும் நோன்பும் :

**வினா – 5 :**

***ரமளானில் மாதவிடாய் உண்டானதன் விளைவாக விடுபட்ட நோன்பு நாட்களுக்குப் பகரமாக ஈடு (களா) செய்யாத ஒரு பெண் என்ன செய்ய வேண்டும்?***

**விடை :**

விசுவாசிகளான பெண்கள் மத்தியில் இத்தகையவை நிகழ்வது துரதிஷ்டமானது; வருந்தத் தக்கது. இது சிலவேளை அறியாமை காரணமாகவோ அல்லது சோம்பல் காரணமாகவோ நிகழலாம்; இரண்டு காரணங்களும் பிழையானவையே. இவற்றை அகற்றவென, அதாவது அறியாமையைப் போக்கிக்கொள்ள அறிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்வதும், சோம்பலைப் போக்கிக்கொள்ள அல்லாஹ்வையும் அவனது தண்டனையையும் கொண்டு அச்சம் கொள்வதும் அவசியமாகும். எனவே, இவ்வாறு நடந்து கொண்ட ஒரு பெண் பச்சாதாபப்பட்டு,மனம் வருந்தி அல்லாஹ்வின் பாப மன்னிப்பை வேண்டி நிற்க வேண்டும். அத்துடன் அவளுக்கு விடுபட்ட நாட்கள் எத்தனை என்பதை முழு முயற்சி செய்து அறிந்து அவற்றிற்கு ஈடு (களா) செய்ய வேண்டும். அத்தகைய பெண்களின் பாப மன்னிப்பு வேண்டுதலை அங்கீகரிக்கும் படி நானும் அல்லாஹ்விடம் வேண்டுகிறேன்; பிரார்த்திக்கின்றேன்.

**வினா – 6 :**

***ஒரு பெண் அறுபத்தைந்து வயதை அடைந்து விடுகின்றாள். கடந்த பத்தொன்பது வருடங்களாக அவளுக்குப் பிள்ளைகளே கிடைக்கவில்லை. தற்போது, மூன்று வருடங்களாக அவளுக்குத் தொடரான இரத்தக் கசிவு இருக்கின்றது. அவள் நோன்பு நோற்க என்ன செய்ய வேண்டும்? அத்துடன் அவளைப் போன்ற நிலையிலுள்ள பெண்கள் (தொழுகை, நோன்பு என்பன தொடர்பாக) என்ன செய்ய வேண்டும்?***

**விடை :**

இத்தன்மை உடைய ஒரு பெண் அவளுடைய வழமையான மாதவிடாய்க் காலத்தின் போது தொழுகை, நோன்பு என்பவற்றிலிருந்து ஒதுங்கி இருக்க வேண்டும். உதாரணமாக : அவள் தனது வழமையான மாதவிடாயை மாதத்தின் முதல் ஆறு நாட்களில் உண்டாகப் பெறுகின்றாள். எனவே, அவள் ஒவ்வொரு மாதமும் முதல் ஆறு நாட்களில் தொழுவதையும் நோன்பு நோற்பதையும் தவிர்க்க வேண்டும். அவ்வாறு செய்ததன் பின்னர், அவள் குளித்து சுத்தமாகி தொழுகை நோன்பு ஆகியவற்றை நிறைவேற்ற வேண்டும். அவள் எல்வாறு தொழுகையை நிறைவேற்ற வேண்டும் என்றால், அவள் தனது மறைவான பகுதியை மிக நன்றாகக் கழுவி, ஒரு

---

* இஸ்திஹாதாஹ், நிஃபாஸ் தொடர்பான அத்தியாயங்களைப் பார்க்கவும்

துணித் துண்டை (Pad) அவ்விடத்தில் வைத்ததன் பின் வுழூஉ செய்ய வேண்டும். கட்டாயமான (பர்ளான) தொழுகைக்குரிய வேளையில் அவள் இவ்வாறு செய்ய வேண்டும். இக் கட்டாயத் தொழுகை வேளைகளைத் தவிர்ந்த சுன்னத்தான தொழுகைகளின்போதும் அவள் இவ்வாறு செய்ய முடியும். அத்தகைய பெண்கள் இத்தகைய கட்டங்களில் எதிர் நோக்கும் கஷ்டங்களைப் பொறுத்து, அவர்கள் லுஹரையும் அஷரையும் சேர்த்து (லுஹருடைய வேளையில் அல்லது அஷருடைய வேளையில்)தொழவும், மஃரிபையும் இஷாவையும் (மஃரிபுடைய வேளையில் அல்லது இஷாவுடைய வேளையில்) தொழவும் அனுமதிக்க முடியும். (ஆனால், தொழுகைகளை சுருக்கித் தொழ முடியாது.) இந்த விதமாக ஒரு நாளின் ஐவேளைத் தொழுகைக்குப் பகரமாக (அதிகாலை ஃபஜர் தொழுகையையும் சேர்த்து) மூவேளைத் தொழுவதற்கு ஏற்பாடு செய்துகொள்ள முடியும். இத்தகைய கட்டாய (பர்ளு)த் தொழுகைக்குச் செய்யும் வுழூஉவைக் கொண்டு அவள் தனது சுன்னத்தான தொழுகைகளையும் தொழுது கொள்ள முடியும்.

வினா - 7 :

*நிஃபாஸ்'டைய ஒரு பெண் ரமளானில் தனது ஏழு நாட்கள் நோன்பை நோற்காது விட்டு விடுகின்றாள். அவள் அதை ஈடு (களா) செய்யவில்லை. அதற்கு அவள் கூறிய காரணம், அவள் சுகவீனமுற்று இருந்தாள் என்பதே. அடுத்து வந்த ரமளான் மாதத்தில் அவள் இன்னும் ஏழு நாட்கள் நோன்பு நோற்கவில்லை. அதற்கான காரணம், அவள் தனது குழந்தைக்குப் பால் ஊட்டுகின்றாள் என்பதே. இந்நிலையில் அவள் என்ன செய்ய வேண்டும்?*

விடை :

உண்மையிலேயே அவள் சுகவீனமுற்று முதலில் விடுபட்ட ஏழு நாட்களுக்கும் ஈடு (களா) செய்ய முடியாது போயிருந்தால், அடுத்த ரமளான் வந்து போனால்கூட அவள் மன்னிக்கப் படுவாள். ஆனால், உண்மையிலேயே அவள் சுகவீனமுறாத நிலையில் சோம்பல் காரணமாக நோன்பை விட்டிருந்தால் அவள் பெறும் பாபமொன்றை செய்தவளாவாள். அதற்காக அவள் அல்லாஹ்விடம் பாபமன்னிப்பு கோருதல் வேண்டும். அன்னை ஆயிஷா (ரலி) அவர்களுக்கு (குறிப்பிட்ட ரமளான் மாதமொன்றின்) விடுபட்ட நோன்புகளுக்காக அடுத்த ஷஃபான் மாதம் வரை ஈடு (களா) செய்ய முடியவில்லை. ஷஃபான் என்பது அடுத்த ரமளான் மாதத்திற்கு முந்திய மாதமாகும்.

இது பற்றி அன்னை ஆயிஷா (ரலி) அவர்களே இவ்வாறு கூறுகின்றார்கள்: "சிலவேளைகளில் நான் ரமளானின் சில நாட்களை (நோன்பு நோற்காது) விட்டு விடுகின்றேன். ஆனால், அவற்றிற்கு ஈடு (களா) செய்வதை ஷஃபான் மாதத்திலன்றி செய்ய முடிவது இல்லை."[64]

எனவே, ஒரு பெண் இவ்வாறு நடந்து கொள்வதையிட்டு மன்னிப்பதற்கு நியாயமான காரணங்கள் இருப்பின், அவள் தனது விடுபட்ட நோன்புகளுக்காக ஒரு வருடம் (அல்லது இரண்டு வருடங்கள்)

64. ஸஹீஹுல் புகாரி (அரபு - ஆங்கிலம்) Vol. 1, பக். 98, ஹதீஸ் எண். 171.

பிந்தியாவது ஈடு (களா) செய்ய முடியும்.

**வினா – 8 :**

***ஒரு கர்ப்பிணி ஒரு விபத்தையடுத்து தனது வயிற்றிலிருந்த சுமையை இழந்ததுடன் அதிக இரத்த வெளியேற்றத்திற்கும் ஆளானாள். இது அவள் கருத்தரித்த ஆரம்ப கட்டத்தில் நிகழ்ந்தது. எனவே, அவள் நோன்பு நோற்காதிருப்பதற்கு அனுமதி உண்டா? அல்லது நோன்பு நோற்க வேண்டுமா? அத்துடன் அவள் தனது நோன்பை முறித்துக்கொண்டால், அதன் மூலம் ஒரு பாபத்தைச் செய்வதாக கொள்ள முடியுமா?***

**விடை :**

இமாம் அஹ்மத் அவர்கள் கூறியது போல், நான் கூறுவதாவது : கர்ப்பிணிக்கு மாதவிடாய் இல்லை. கர்ப்பந்தரித்த பெண்ணாக ஒரு பெண் ஆகிவிடும்போது அவளது வழமையான மாதவிடாய் வட்டம் நின்று விடுகின்றது. “அல்லாஹ் பெண்களுக்கு மாதவிடாய் என்றொன்றை ஏற்படுத்தியிருப்பதன் காரணம், அதன் மூலம் ஜீவப் பொருளின் (Embryo) ஆரம்ப நிலைக்கு ஊட்டச்சத்து வழங்கத்தான்” என சில அறிஞர்கள் கூறுகின்றனர். எப்பொழுதாவது ஒரு பெண் கர்ப்பிணியானால் அவளது மாதவிடாய் நின்று விடுகின்றது. எவ்வாறாயினும், சில பெண்களுக்கு கர்ப்பந்தரித்த பின்னரும் மாதவிடாய் தொடர்ந்திருக்கச் செய்யும். இது உண்மையான மாதவிடாய் என்றே கொள்ளப்படும். ஏனெனில், ஆரம்ப மாதவிடாய் அவர்கள் கருத்தரித்தமையால் பாதிக்கப்படவில்லை. இந்நிலையில், மாதவிடாய் தொடர்பான அத்தனை சட்டங்களும் இதற்குப் பொருந்துவனவாக இருக்கும்.

இன்னும் சில வகையிலான இரத்த வெளியேற்றங்கள் இருக்கின்றன. இவை – ஏதாவது தூக்குதல், விழுதல் அல்லது அத்தகைய விபத்துக்கள் மூலம் உண்டாகுபவையே. இவை மாதவிடாய் மூலம் ஆகுபவை அல்ல. மாறாக, ஏதோவோர் இரத்த நாலத்திலிருந்து வெளிப்படுவதாகும். எனவே, இவை எந்த வகையிலும் ஒருகர்ப்பிணியின் தொழுகையையோ நோன்பையோ கட்டுப்படுத்தாது; தடை செய்யாது. அவளது நிலை நன்கு சுத்தமான ஒரு பெண்ணின் நிலையேயாகும்.

ஆயினும், ஒரு விபத்து மூலம் ஒரு பெண்ணின் வயிற்றில் உள்ள கரு வெளியாகிவிடும்போது, அது தெளிவான மனித உருவைக் கொண்டிருந்தால், அப்பொழுது வெளியாகும் இரத்தம் நிஃபாஸுடையதே என இஸ்லாமிய அறிஞர்கள் கருதியுள்ளனர். எனவே, தொழுகை, நோன்பு போன்றவற்றைத் தவிர்ப்பதுடன், அவள் நன்கு சுத்தமாகும் வரை தனது கணவனுடன் உடலுறவு கொள்வதும் கூடாது. ஆனால், அக்கட்டத்தில் அவளில் இருந்து வெளியாகும் கரு மனித உருவின் அமைப்பைக் கொண்டிராவிட்டால், அப்பொழுது அவளது இரத்த வெளியேற்றம் நிஃபாஸுக்குரியது அல்ல. அது வீணாகிய இரத்தமே. அதனால் தொழுகை, நோன்பு போன்றவைக்கு தடையேற்படுவது இல்லை. ஒரு தாயின் கருப்பையில் உள்ள கரு மனித உருவைப் பெறுவதற்கு மிகக் குறைந்த பட்சம் 81 நாட்கள் எடுப்பதாக இஸ்லாமிய அறிஞர்கள் கருத்து வழங்கியுள்ளார்கள். இது கீழ்க்காணும் ஹதீஸுடன் இணங்கி வருகின்றது.

நபி (ஸல்) அவர்கள் நவின்றதாக அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவித்ததாவது:

“உங்களுள் ஒவ்வொருவரும் உங்கள் தாயின் கருப்பையில் நாற்பது நாட்கள் சேர்த்து வைக்கப்

படுவீர்கள். பின்னர் அதற்கு சமமான (நாற்பது நாட்கள்) காலத்தில் ஓர் இரத்தக் கட்டியாக மாற்றப் படுவீர்கள். பின்னர் அதற்குச் சமமான (நாற்பது நாட்கள்) காலத்தில் ஒரு சதைத் துண்டாக மாற்றப் படுவீர்கள். பின்னர் அல்லாஹ் ஒரு மலக்கை அனுப்பி நான்கு விடயங்களை எழுதும்படி கட்டளையிடுவான். அவையாவன: அவனது உணவுப் பங்கீடு, அவனது வயது, அவன் (மறுமையில்) துர்ப்பாக்கியமானவனின் நிலையில் இருப்பானா? அல்லது நற்பாக்கியம் பெற்றவனின் நிலையில் இருப்பானா?......"[65] என்பனவாகும்.

தாயின் கருப்பையில் உள்ள கரு 81 நாட்களுக்கு முன் மனித உருவின் அமைப்பைப் பெறுவது சாத்தியமில்லை. சில இஸ்லாமிய அறிஞர்களின் கூற்றுக்கமைய அனேகமாக இக்கால எல்லை 90 நாட்களாகும்.

## மாதவிடாயும் தொழுகையும்.

வினா - 9 :

*குறிப்பிட்டதொரு தொழுகைக்குரிய நேரம் ஆரம்பமாகி, சற்று பின்னர் ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் உண்டானால் அக்கட்டத்துக்குரிய சட்டம் என்ன? அத்துடன், குறிப்பிட்டதொரு தொழுகைக்குரிய நேரம் முடிவடைவதற்கு முன்னர் அவள் சுத்தமாகி விட்டால், அக்கட்டத்திலான சட்டம் என்ன?*

விடை :

குறிப்பிட்டதொரு தொழுகைக்குரிய நேரத்தில் ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் உண்டானாலும், அதற்கு முன், அவள் சுத்தமாக இருக்கும் போது, அந்தத் தொழுகையைத் தொழவில்லையாயின், கீழ்க்காணும் ஹதீஸ்'க்கு அமைவாக அந்தத் தொழுகைக்கு அவள் ஈடு (களா) செய்தாக வேண்டும். "யாரேனும் ஒருவர் ஒரு தொழுகையின் ஒரு ரக்அத்தை (அதற்குரிய சரியான நேரத்தில்) பெற்றுக் கொள்ள முடிந்தால், அப்பொழுது அவர் அத் தொழுகையைப் பெற்றுக்கொண்டார்"* என்பதே அந்த ஹதீஸ். எனவே, தொழுகையின் ஒரு ரக்அத்தை அவள் பெற முடிந்து, அதன் பின் ஒழுங்காகத் தொழுகையை நிறைவேற்றுவதற்கு முன் மாதவிடாய் வரப் பெற்றால், அப்பொழுது சுத்தமாகிய பின் அத்தொழுகையை ஈடு (களா) செய்வது அவள் மீது கடமையாகும்.

மறுபுறம், குறிப்பிட்டதொரு தொழுகைக்குரிய நேரம் முடிவடைவதற்கு முன்னர் அவள் சுத்தமாகிவிட்டால், அப்பொழுது அவள் (குளித்து) தன்னைச் சுத்தப்படுத்திக் கொண்டு இத் தொழுகைக்கு ஈடு (களா) செய்ய வேண்டும். அவளது மாதவிடாய் நின்று, சூரியன் உதயமாகு முன்னர் ஒரு ரக்அத் தொழுவதற்குரிய நேரம் இருந்தால், அப்பொழுது அந்தப் ஃபஜ்ர் தொழுகையை அவள் சுத்தமாகியதை அடுத்து ஈடு (களா) செய்வது கடமையாகும். அத்துடன், அவளது மாதவிடாய் நின்று, நடுராத்திரிக்கு முன்னர் ஒரு ரக்அத் மட்டுமே தொழுவதற்குரிய நேரம் இருந்தால், அப்பொழுது இஷா தொழுகைக்கு ஈடு (களா) செய்வது

---

65. அடிக்குறிப்பு எண் 60 ஐப் பார்க்கவும்.

* அடிக் குறிப்பு எண் 26 ஐப் பார்க்கவும்.

அவள் மீது கடமையாகும். ஆனால், அவளது மாதவிடாய் நடு ராத்திரிக்குப் பின்னர் நிற்குமாயின், அப்பொழுது அவள் இஷாத் தொழுகைக்கு ஈடு (களா) செய்ய வேண்டியது இல்லை. ஆனால், அவள் அன்றைய தினம் விடியும் போதுள்ள ஃபஜர் தொழுகையை உரிய நேரத்தில் நிறைவேற்ற வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ فإذا إطمئننتم فاقيموا الصلاة إنّ الصلاة كانت على المؤمنين كتاباً موقوتا ﴾

[ النساء ، الآية ١٠٣ ]

*"மேலும் எதிரிகள் குறித்து அச்சம் நீங்கிவிட்டால் தொழுகையை முழுமையாக நிறைவேற்றுங்கள். உண்மையாகவே குறிப்பிட்ட நேரத்தில் நிறைவேற்ற வேண்டும் என்ற நிபந்தனையுடன் இறைநம்பிக்கையாளர்கள் மீது தொழுகை கடமையாக்கப்பட்டுள்ளது."*

(அல் குர்ஆன் 4:103)

இத்தொழுகைகளாவன தெளிவாகக் குறித்துக்காட்டப்பட்டுள்ள தொழுகைகளாகும். இவை குறித்த நேரத்தில் தொழுதேயாக வேண்டும். அன்றி, இத்தொழுகைகளை இவற்றிற்குரிய நேரத்திற்கு முன்னரோ அல்லது பின்னரோ தொழுவதற்கு எவருக்கும் அனுமதியில்லை.

வினா - 10 :

***ஒரு பெண் ஃபஜ்ர் தொழுகைக்கு முன்னர் தனது மாதவிடாயிலிருந்து சுத்தமாகிவிடுகின்றாள் என வைத்துக் கொள்வோம். ஆனால், தொழுகை நேரம் ஆரம்பமான பின்னரே குளித்து சுத்தமாகி, அன்றைய நோன்பை நோற்றாள். அவ்வாறு நோற்ற அவளது நோன்பு சரியானது என ஏற்க முடியுமா?***

விடை :

ரமளான் மாதத்தில் ஃபஜர் தொழுகைக்கென குறிக்கப்பட்ட நேரம் ஆரம்பமாவதற்கு ஒரு நிமிடத்துக்கு முன்னர் ஒரு பெண் சுத்தமாகிவிட்டால் அன்றைய நோன்பை அவள் நோற்க வேண்டும்; அவ்வாறு நோற்கும் அவளது நோன்பு சரியானதே; அதற்கு ஈடு (களா) செய்ய வேண்டிய அவசியமும் இல்லை. ஏனெனில், அவள் ஃபஜர் தொழுகை வரும் வரைக்குமே குளிக்காவிட்டாலும், அவள் சுத்தமானவுடன் நோன்பு நோற்று விடுகின்றாள். இது ஒரு மனிதனுக்குக் கனவில் ஈரமாதல் அல்லது ஜனாபத்துடைய நிலையில் இருத்தல் போன்ற நிலைக்கு சமமானதே. அவன் (ஃபஜர் தொழுகைக்கு முன்னர் உணவுண்டு) ஸஹர் செய்து நோன்பு நோற்று, ஃபஜர் தொழுகைக்குப் பின்னர் குளிக்கலாம்.

சில பெண்கள் மாலையில் நோன்பைத் திறந்த பின் இஷாத் தொழுகைக்கு முன் மாதவிடாய் உண்டாகினால் அவர்கள் நோற்ற நோன்பு சரியானது அல்ல எனக் கருதுகின்றார்கள். இவ்வாறு கருதுவது தவறு என அவர்களை நான் எச்சரிக்க விரும்புகிறேன். அவர்களது மாதவிடாய் சூரியன் மறைந்து (மஃரிபுக்குப்பின்) நொடிப்பொழுது நேரத்தில் உண்டாகினாலும் கூட அன்று அவர்கள் நோற்ற நோன்பு சரியானதே; பூரணமானதேயாகும். அதில் சந்தேகம் கொள்ள வேண்டிய அவசியமே இல்லை.

## ஹஜ், உம்ரா ஆகியவையின் போது மாதவிடாய் உண்டாகுதல்

**வினா - 11 :**

*ஒரு பெண்ணுக்கு ஹஜ்ஜின் போது மாதவிடாய் உண்டாகி விடுகின்றது. ஆனால், அவள் அதை எவரிடமும் கூற வெட்கப்பட்டாள். எனவே, (அந்த நிலையில்) மஸ்ஜிதுல் ஹராமிலுல் சென்று தொழுகின்றாள்; தவாஃப், ஸஃயீ என்ற வழிபாடுகளையும் செய்கின்றாள். இவ்வாறு நடந்து கொண்டது தொடர்பாக அவள் என்ன செய்ய வேண்டும்?*

**விடை :**

மாதவிடாய் உண்டான ஒரு பெண் தனது இல்லத்திலோ, மக்காவிலோ அல்லது வேறு எவ்விடத்திலோ தொழுவது கூடாது; அதற்கு அனுமதியில்லை. நபி (ஸல்) அவர்கள் கேட்கின்றார்கள்: "மாதவிடாய் உண்டான ஒரு பெண் தொழுவதோ நோன்பு நோற்பதோ இல்லை என்பது உண்மையில்லையா?"[66] என்று. ஒரு பெண் மாதவிடாய் உண்டாகி இருக்கும் போது தொழுவதும் நோன்பு நோற்பதும் கூடாது என்பது எல்லா இஸ்லாமிய அறிஞர்களினதும் ஏகோபித்த - இஜ்மாவுடைய தீர்ப்பாகும். இந்தப் பெண் தனது இச்செயலுக்காக வருந்தி பச்சாதாபப்பட்டு அல்லாஹ்விடம் பாபமன்னிப்பு கோர வேண்டும். அந்நிலையில் அவள் செய்த தவாஃபும் சரியானது அல்ல. அவள் அந்த தவாஃபுக்கு ஈடு (களா) செய்ய வேண்டும். அவ்வாறு தவாஃபை அவள் ஈடு (களா) செய்யும் வரை அவளது கணவன் அவளுடன் உடலுறவு கொள்ளக் கூடாது. சிலவேளை திருமணம் ஆகாத ஒரு பெண் இத்தவறைச் செய்திருந்தால், அவள் அத்தவறுக்கு ஈடாக தவாஃபை களா செய்யாத வரையில், அவளுக்குத் திருமண ஒப்பந்தங்கள் செய்யக் கூடாது. அல்லாஹ் மிக அறிந்தவன். அவள் செய்த ஸஃயீயைப் பொறுத்த வரையில், அது சரியானது என்பதற்கு பலமான ஆதாரக் கருத்து இருக்கின்றது. இக் கருத்துக்கமைய தவாஃபுக்கு முன்னர் ஸஃயீ செய்வது அனுமதிக்கப்படக் கூடியதே.

**வினா - 12 :**

*ஒரு பெண் மாதவிடாய் உண்டாகி இருக்கும் போது மீகாத்[67]தைக் கடந்து செல்கின்றாள். ஆனால் அவள் இஹ்ராம் அணியவில்லை. அவள் சுத்தமாகும் வரை மக்காவில் இருந்து, சுத்தமான பின்னர் அங்கேயே இஹ்ராம் அணிகின்றாள். இது அனுமதிக்கப்பட்டதா? அல்லது அனுமதிக்கப்படாவிட்டால் என்ன செய்ய வேண்டும்?*

**விடை :**

இது அனுமதிக்கப்பட்டது அல்ல. ஒரு பெண் தனது இஹ்ராமை மீக்காத்திலேயே அணிய வேண்டும். அவள் மீகாத்தைக் கடந்து செல்லக் கூடாது - அவள் மாதவிடாய் உண்டாகி இருந்தாலும் சரியே. அப்பொழுது அவளது இஹ்ராம் சரியானதே. இதற்கான ஆதாரம் அபூபக்கர் (ரலி) அவர்களது மனைவியான

66. ஸஹீஹுல் புகாரி (அரபு-ஆங்கிலம்) Vol: 1, பக்: 182, ஹதீஸ் எண்: 301.

67. மீகாத் : 'மவாகீத்' என்ற பன்மை சொல்லின் ஒருமைச் சொல்லே 'மீகாத்' என்பது, ஒருவர் ஹஜ் அல்லது உம்ரா நிறைவேற்ற நாடிச்செல்லும் பொழுது இஹ்ராம் அணிவது அவசியம். அவ்வாறு இஹ்ராம் அணியும் இடமே இப்பெயரில் அழைக்கப்படுகின்றது.

அஸ்மா பிந்தி உமைஸின் வாழ்வில் உண்டு. அவர் ஹஜ்ஜுக்குப் போகும் வழியில் ஒரு குழந்தையைப் பெறுகிறார். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் தனது இறுதி ஹஜ்ஜை நிறைவேற்றவென துல் ஹுலைபா[68] விலுள்ள மீகாத்தில் இருக்கின்றார்கள். அந்த அம்மையார், "இந்நிலையில் நான் என்ன செய்ய வேண்டும்?" என நபிகளாரிடம் கேட்டனுப்பினார்கள். "குளியுங்கள்; 'இஸ்தத்ஃபிர்ஸ்[69] செய்து இஹ்ராம் அணியுங்கள்'[70] என நபி (ஸல்) அவர்கள் நவின்றார்கள். மாதவிடாய் இரத்தம், நிஃபாஸுடைய இரத்தம் போன்றதே. இதன் கருத்து என்னவெனில், ஒரு பெண் நிஃபாஸுடைய இரத்தத்தை சுத்தம் செய்வது போலவே மாதவிடாய் இரத்தத்தையும் சுத்தம் செய்து இஹ்ராம் அணிய முற்பட வேண்டும் என்பதாகும்.

இஹ்ராம் அணிந்த நிலையிலுள்ள மாதவிடாய் உண்டான ஒரு பெண், தான் சுத்தமாகும் வரை மஸ்ஜிதுல் ஹராமிற்கு செல்ல முடியாது; தவாஃப் செய்யவும் கூடாது. அதனால்தான் நபி (ஸல்) அவர்கள் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் உம்ராவின்போது மாதவிடாய் உண்டானதைத் தொடர்ந்து இவ்வாறு நவின்றார்கள்: "அனைத்து யாத்ரீகர்களும் செய்பவற்றை செய்யுங்கள். ஆனால், நீங்கள் சுத்தமாகும் வரை கஃபாவை வலம் வரும் தவாஃபைச் செய்ய வேண்டாம்."[71]

மேலும், அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் தனது மாதவிடாயிலிருந்து சுத்தமான பின்னர் தவாஃபும் ஸஃயீயும்[72] செய்ததாக,ஸஹீஹுல் புஹாரியில் அவர்களே அறிவித்துள்ளார்கள். இதன் மூலம் குறித்துக் காட்டப்படுவதாவது: ஒரு பெண் இஹ்ராமின் போது அல்லது தவாஃபுக்கு முன்னர் மாதவிடாய் உண்டாகப்பெற்றாள் அவள் சுத்தமாகி குளிக்கும் வரை தவாஃப் அல்லது ஸஃயீ செய்யக் கூடாது என்பதே. அவள் தவாஃபுக்குப் பின்னர் மாதவிடாய் உண்டாகப் பெற்றால், அவளுக்கு ஸஃயீ செய்து, தனது தலைமுடியில் சிறு பகுதியைக் கத்தரித்து, உம்ரா சார்ந்த அத்தனைக் கடமைகளையும் நிறைவுசெய்ய முடியும்.இதற்குக் காரணம் மாதவிடாயிலிருந்து சுத்தமாகி இருக்க வேண்டும் என்பது ஸஃயீ செய்வதற்குரிய ஒரு நிபந்தனை அல்ல என்பதாகும்.

## மாதவிடாயும் விவாகரத்தும்

வினா - 13 :

*தயவு செய்து மாற்றக்கூடிய (வாபஸ் பெறக்கூடிய) விவாகரத்துக்கான நிபந்தனைகளை விளக்கிக் கூறுங்கள். விவாகரத்தான பெண் இத்தாவின்போது அவளுடைய கணவனின் வீட்டில் இருக்க வேண்டுமா? அல்லது அவள் தனது குடும்பத்து வீட்டில் இருக்க வேண்டுமா?*

விடை :

விவாகரத்தான பெண் குறிப்பிட்ட இத்தாவின்போது தனது கணவனின் வீட்டிலேயே இருக்க

68. துல் ஹுலைஃபாஹ் : மதீனாவிலிருந்து மக்காவுக்குச் செல்லும் வழியிலான ஆறாவது மைல் கல்லில் உள்ள ஓர் இடத்தின் பெயர்.

69. இஸ்தத்பிர்ஸ் : பெண்ணின் மாதவிடாயின் போது மறைவான இடத்தில் இறுக்கமாக அணிந்து கொள்ளும் ஒரு துணித் துண்டின் பெயர்.

70. ஸஹீஹ் முஸ்லிம் (ஆங்கிலம்) Vol: 2, பக்: 598,599, ஹதீஸ் எண்: 2762,2763

71. அடிக் குறிப்பு எண் : 9 ஐப் பார்க்கவும்.

72. ஸஹீஹுல் புஹாரி (அரபு-ஆங்கிலம்) Vol: 1, பக்: 188,189, ஹதீஸ் எண்: 314,316

**வேண்டும். அன்றி, அவளை அவளது கணவன் (தனது வீட்டிலிருந்து) வெளியேற்றுவது சட்டமுரணான செயலாகும்.**

அல்லாஹ் பணிக்கின்றான் :

﴿ لا تُخرِجوهُنَّ مِنْ بُيوُتِهِنَّ ولا يَخرُجْنَ إلاَّ انْ يَأتِينَ بفاحِشةٍ مُبَيِّنةٍ وتلكَ حُدُودُ اللّهِ وَمَن يَتَعَدَّ حُدُودَ اللهِ فَقَدْ ظَلَمَ نَفْسَهُ﴾ [الطلاق الآية ١]

***"(இத்தாவின் காலத்தில்) அப்பெண்களை அவர்களின் இல்லங்களிலிருந்து நீங்களும் வெளியேற்ற வேண்டாம்; அவர்களாகவும் வெளியேற வேண்டாம். அவர்கள் ஏதேனும் வெளிப்படையான - மானக்கேடான செயல்கள் செய்தாலே தவிர - இவை அல்லாஹ்வினால் நிர்ணயிக்கப்பட்ட வரம்புகளாகும். யாரேனும் அல்லாஹ்வின் வரம்புகளை மீறுவாராயின் திண்ணமாக, அவர் தனக்குத்தானே கொடுமை புரிந்து கொண்டவராவார்."***

**(அல் குர்ஆன் 65:01)**

ஆனால், சில மனிதர்கள் என்ன செய்கின்றார்களெனில், அவர்கள் விவாகரத்து செய்த மனைவியரை அம்மனைவியரின் பெற்றோர் இல்லங்களுக்கு அனுப்பி விடுகின்றனர். இது தவறு என்பது மட்டுமல்ல அல்லாஹ்வின் கட்டளைக்கும் மாறானது. அல்லாஹ் மேற்கூறிய வசனத்தைத் தொடர்ந்து அந்தப் பெண்ணை அவளது கணவனின் இல்லத்திலேயே இருக்கச் செய்வதன் மேன்மையை எடுத்துரைக்கின்றான்.

இதோ அவன் கூற்று :

﴿ لا تَدْرِي لَعَلَّ اللهَ يُحْدِثُ بَعْدَ ذَلكِ أمراً﴾ [ الطلاق, الآية ١ ]

***"இதற்குப் பிறகு (ஒத்துப் போவதற்கான) ஏதேனும் சூழ்நிலையை அல்லாஹ் உருவாக்கக் கூடும் என்பதை (தனது மனைவியை விவாகரத்து செய்த) நீங்கள் அறிவது இல்லை."***

(அல் குர்ஆன் 65:01)

எனவே, முஸ்லிம்கள் தமது பழக்க வழக்கங்கள், அத்துமீறல்கள் மூலம் அல்லாஹ்வின் சட்டங்களையும் வரையறைகளையும் மீறும் கொடுமையைச் செய்யக் கூடாது.

அவள் தனது கணவனின் இல்லத்தில் இருக்கும்பொழுது தன்னை அழகுபடுத்திக் கொள்ளவும், தனது கணவனுடன் உரையாடவும், அனுமதிக்கப்பட்ட அனைத்து வேலைகளையும் செய்யவும் முடியும். அந்நிலையில் அவள் செய்யக் கூடாதவை எவையென்றால் கணவனுடன் உடலுறவு கொள்ளவும், பாலுணர்வைத் தூண்டக் கூடியவைகளையுமேயாகும். அதாவது இவை கண்டிப்பாகத் தவிர்க்கப்பட வேண்டும். அதேவேளை, "நான் உன்னைத் திரும்பப் பெறுகின்றேன்" எனக் கூறி அவளது கணவன் அவளைத் திரும்பப் பெற்றுக் கொள்வதற்கு உரிமையுண்டு. அல்லது அவளைத் தன்னளவில் திரும்பப் பெறும் எண்ணத்(நிய்யத்)துடன்

அவளுடன் அவளது கணவன் உடலுறவு கொள்ளவும் முடியும்.

விவாகரத்தான ஒரு பெண்ணின் இத்தாவைப் பொறுத்த வரையில் சில முக்கிய அம்சங்கள் தெளிவுபடுத்த விழைகின்றேன்.

அவையாவன :

அவள் தனது கணவனுடன் உடலுறவு கொள்வதற்கு முன்னர், அல்லது அவள் தனது கணவனுடன் எந்த வகையிலும் தனிமையில் இருப்பதற்கு முன்னர் விவாகரத்து செய்யப்பட்டால், அப்பொழுது அவளுக்கு இத்தா என்பது இல்லை. அவள் விவாகரத்து செய்யப்பட்ட அடுத்த நிமிடம் அவள் விரும்பினால் மறுமணம் புரிய முடியும். மறுபுறம், அவன் அவளுடன் தனிமையில் இருந்தால் அல்லது உடலுறவு கொண்டால் அப்பொழுது அவள் இத்தா இருக்க வேண்டும். அவளுடைய இத்தா கீழ்க்காணும் ஏனைய நிபந்தனைகளுடன் தொடர்புற்றதே.

அ) அவள் கருவுற்றிருந்தால், அவளது இத்தா பிரசவம் நடைபெறும் வரை நீடிக்கும்; அவள் கருவுற்றுள்ள காலம் எவ்வளவும் ஆகலாம்; அது கவனத்தில் கொள்ளப்படுவது இல்லை. உதாரணமாக: அவன் அவளைக் காலையில் விவாகரத்து செய்கிறான்; பகலாகுமுன் அவளுக்குப் பிரசவம் நடைபெறுகின்றது. அவ்வளவுதான். அவளுடைய இத்தாவுடையகாலம் அத்துடன் முடிந்து விடுகின்றது. அவன் அவளை முஹர்ரம் மாதத்தில் விவாகரத்து செய்கின்றான்; அவளுக்கு துல்ஹஜ் மாதம் பிரசவம் நடைபெறுகின்றது. அப்பொழுது அவளுடைய இத்தாவுடைய காலம் பன்னிரண்டு மாதங்கள் ஆகின்றன. இது இவ்வாறு அமையக் காரணம், அல்லாஹ் மிகத் தெளிவாக கர்ப்பிணிப் பெண்ணின் இத்தா காலம் எவ்வளவு என குறிப்பிடுவதுதான்.

அவன் கூறுகின்றான்:

﴿ وَأُولَاتُ الْأَحْمَالِ أَجَلُهُنَّ أَنْ يَضَعْنَ حَمْلَهُنَّ ﴾ [ الطلاق، الآية ٤ ]

*"மேலும், கர்ப்பிணிகளுக்கான (அவர்கள் விவாகரத்து செய்யப்பட்டோ அல்லது அவர்களது கணவர்கள் மரணித்தோ இருந்தால்) இத்தா வரம்பு அவர்கள் குழந்தை பெற்றெடுப்பதுடன் முடிகின்றது."*

(அல் குர்ஆன் 65:4)

ஆ) அவள் கர்ப்பிணி அல்லள். ஆனால், மாதவிடாய் உண்டாகுபவளாக இருக்க முடியும். அப்பொழுது அவளது இத்தா விவாகரத்து செய்ததிலிருந்து முழுமையான மூன்று மாதவிடாய் கால எல்லைகளாகும். உதாரணமாக: அவளுக்கு முதல் மாதவிடாய் உண்டாகி சுத்தமடைகின்றாள். (அது முதல் எல்லை) அடுத்த மாதவிடாய் உண்டாகி சுத்தமடைகின்றாள். (அது இரண்டாவது எல்லை.) இறுதியாக, அவளுக்கு மூன்றாவது மாதவிடாய் உண்டாகி சுத்தமடைகின்றாள். (அது மூன்றாவது எல்லை) இந்த ஒவ்வொரு கால எல்லைக்கும் இடையிலான காலத்தின் நீளத்தைப் பொறுத்த வரையில் இத்தா சுதந்திரமான தன்மையைக் கொண்டதே.

உதாரணமாக : அவள் தனது குழந்தைக்கு பாலூட்டும் போது விவாகரத்து செய்யப்படுகின்றாள் என வைத்துக் கொள்வோம். அதனால் அவளுக்கு இரண்டு வருடங்களுக்கு மேலாகியும் மாதவிடாய் உண்டாகவில்லை.

இந்நிலையில், அவளது அடுத்த இரண்டு மாதவிடாய்களும் உண்டாகும் வரையில் அவள் இத்தாவில் இருப்பதாகவே கொள்ள வேண்டும். இங்கு மாதவிடாய் கால மூன்று எல்லைகளுக்கும் இடையிலான காலத்தின் நீளம் (அது குறைவானதோ நீளமானதோ) கவனத்தில் கொள்ளப்படமாட்டாது. இத்தாவைப் பொறுத்த வரையில் மூன்று மாதவிடாய்கள் நிறைவு செய்யப்பட வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான் :

﴿ والمُطَلَّقاتُ يَتَرَبَّصنَ بأنفُسِهِنَّ ثلاثَةَ قُروءٍ ﴾[البقرة ، الآية ٢٢٨]

*"தலாக் சொல்லப்பட்ட பெண்கள் மூன்று மாதவிடாய்கள் ஆகும் வரை தாமாகவே பொறுத்திருக்க வேண்டும்."*

(அல்குர்ஆன் 2:228)

இ) அவள் பருவமடையாததன் விளைவாகவோ அல்லது வயதானதன் விளைவாகவோ மாதவிடாய் வரப்பெறவில்லையாயின், அப்பொழுது அல்லாஹ்வின் ஆணைக்கமைய அவளது இத்தாவுக்குரிய காலம் மூன்று மாதங்களாகும்.

அல்லாஹ்வின் ஆணை இதுதான்:

﴿ واللائي يَئِسنَ من المَحيضِ من نسائِكُم إن ارتَبتُم فَعِدَّتُهُنَّ ثلاثَةُ أشهُرٍ واللائي لم يَحِضنَ ﴾ [ الطلاق ، الآية ٤]

*"உங்கள் பெண்களில், எவர்கள் 'இனி மாதவிலக்கு வராது' என்று நம்பிக்கையிழந்து விட்டிருக்கின்றார்களோ அவர்களுடைய விஷயத்தில் (இத்தாவை நிர்ணயிப்பதில்) உங்களுக்கு ஏதாவது சந்தேகம் வந்தால், (நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள்:) அவர்களுடைய இத்தா காலம் மூன்று மாதங்களாகும். மேலும், எந்தப் பெண்களுக்கு (பருவமடையாத காரணத்தால்) இது வரையிலும் மாதவிலக்கு வரவில்லையோ அவர்களுக்கான விதிமுறையும் இதுவே!"*

(அல் குர்ஆன் 65:4)

ஈ) மாதவிடாய் வரப் பெற்றுக்கொண்டிருந்த ஒரு பெண்ணுக்கு அடையாளங் காணப்பட்ட சில காரணங்கள் நிமித்தம் அது வராது நின்றுவிடுகின்றது. உதாரணமாக : (அவளுடைய கருப்பை அகற்றப்பட்டது போன்ற காரணங்களைக் குறிப்பிடலாம்) அவ்வாறு நின்றுவிட்ட மாதவிடாய் திரும்பவும் ஒரு போதும் வரமாட்டாது. இப்பெண்ணின் இத்தா காலம் மாதவிடாய் வரப்பெறும் காலத்தை கடந்துவிட்ட வயதான பெண்களின் இத்தா காலம் போன்றதே. அதாவது மூன்று மாதங்களாகும்.

உ) ஏதோ சில அடையாளங் காணப்பட்ட காரணங்கள் நிமித்தம் தனது மாதவிடாய் நிற்கக் கண்ட ஒரு பெண், அக்காரணங்கள் நீங்கி மீண்டும் மாதவிடாய் உண்டாகும் வரை காத்திருக்க வேண்டும். அவளுடைய இத்தா முழுமையான மூன்று மாதவிடாய்க் காலமாக இருக்கும்.

ஊ) சிலவேளை, அடையாளங் காணப்படாத காரணங்கள் விளைவாக அவளது மாதவிடாய் நிற்கக் கண்டால், இஸ்லாமிய அறிஞர்களின் கருத்துக்கமைய அவளது இத்தா காலம் ஒரு வருடமாகும். கருத்தரித்த மூன்று கால எல்லைகளுக்கான ஒன்பது மாதங்களும், இத்தாவுக்கான மூன்று மாதங்களும் இதிலடங்கும்.

இறுதியாக, எந்தப் பெண்ணின் திருமண ஒப்பந்தம், 'அல்கூல்' காரணமாகவோ வேறு முறைகளாலோ இரத்தாகி விடுமாயின், அப்பொழுது அவளுடைய இத்தாக் காலம் ஒரு மாதவிடாய் கால எல்லையாகும்.*



* 4வது அத்தியாயத்தின், 'விவாகரத்து' பற்றிய 7வது உப தலைப்பிலுள்ள 3வது விடயத்தைப் பார்க்கவும்.

ⓒ المكتب التعاوني للدعوة والإرشاد بالبديعة ، ١٤١٦هـ
فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر
العثيمين ، محمد بن صالح
الدماء الطبيعية للنساء/ ترجمة شريف الدين محمد منصور .
٧٢ ص ، × سم
ردمك ٩ ـ ٢٣ ـ ٧٩٩ ـ ٩٩٦٠
( النص باللغة التاميلية )
١ ـ الحيض ( فقه إسلامي ) ٢ ـ الطهارة ( فقه إسلامي )
أ ـ منصور ، شريف الدين محمد ( مترجم ) ب ـ العنـــوان
ديوي ٢٥٢,١ ١٦/٠٥٢٧
**رقم الإيداع : ١٦/٠٥٢٧**
**ردمك : ٩ ـ ٢٣ ـ ٧٩٩ ـ ٩٩٦٠**






# الدماء الطبيعية للنساء

تاليف

فضيلة الشيخ / محمد بن صالح العثيمين

ترجمه للتاميلية

شريف الدين محمد منصور

# الدماء الطبيعية للنساء

تأليف فضيلة الشيخ

**محمد بن صالح العثيمين**

- رحمه الله -

**تاميلي - ٢٦١**

ترجمة

**شريف الدين محمد منصور**

ردمك : ٩-٢٣-٧٩٩-٩٩٦٠

Co-operative office for Call & foreigners Guidance at Sultanah



المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بسلطانة
تحت إشراف وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
E.mail : Sultanah22@hotmail.com